ஸ்ரீமதே இராமானுஜாய நம:

# இராமானுஜ சரித்ர ஸங்க்ரஹம் மற்றும் ஆச்சார்ய பரம்பரை

## தொகுத்தளிக்க உதவியவர்கள்


Dr.K. Anantha, M.A., Ph.D Associate Professor

Sri Lal Bhagadur Sastri Rastiya Sanskrit Vidyapeeta

(Deemed University. New Delhi)

Thiru V.A. Varadhan, B.Com., L.L.B.,

Assistant Commissioner (Retired)

Commercial Tax/Chennai.



## வெளியிடுபவர்

திருமலை குமார நம்பாக்கம்/கணிசப்பாக்கம்

K.T. ராமானுஜாச்சாரி/

K.T. சீனுவாசன் குடும்பத்தினர்

**தொலைபேசி : 044–22422010 – 7200006715**

# ஸ்ரீமத் இராமானுஜசரித்ர ஸங்க்ரஹம்

நாதமுனிகள் முதல் ஆச்சார்ய பரம்பரை:-

1. நாலாயிர திவ்யப் பிரபந்தம் பற்றி அறிதல்
2. ஸ்ரீமந் நாதமுனிகளின் சீடர்கள்
3. உய்யக்கொண்டார்
4. மணக்கால் நம்பி
5. மணக்கால் நம்பியின் சீடர்கள்
6. ஆளவந்தார்
7. யமுனைத்துறைவரும் ஆக்கியாழ்வானும்
8. மணக்கால் நம்பி ஆளவந்தாரை தடுத்தாட் கொள்ளுதல்
9. குருகைக் காவலப்பன்
10. ஆளவந்தார் அருளிச் செய்த நூல்கள்
11. ஆளவந்தாரின் சிஷ்யர்கள்
12. ஆளவந்தார் மாறனேரி நம்பியை அனுக்கிரஹித்தல்
13. ஆளவந்தாரின் குமாரர்கள்
14. தாதாசார்யர்கள் என்ற பெயர் பெற்றது
15. திருக்குருகை பிரான் பிள்ளான்
16. ஸ்ரீமந்நாராயண யதிந்திர மஹாதேசிகன்.
17. கணிசப்பாக்கம் வீரராகவ மஹாதேசிகன் ப்ருந்தாவனம்

## ஸ்ரீ ராமானுஜவைபவ ஸங்க்ரஹம்

எண்ணற்ற ஞானிகளும் மகான்களும் பிறந்த நாடு நம் பாரத நாடு. ஞானம், பக்தி, தத்துவம், தொண்டு சீர்திருத்தம் ஆகியவற்றுடன் தன் வாழ்க்கையையே தன் செய்தியாக முன் வைத்துவிடடுப் போனவர்கள் அரிதினும் அரிதானவர்கள். அத்தகைய அரியதொரு மகான்களில் ஒருவர் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார். ஆன்மிக ரீதியிலும், சமய அடிப்படையிலும் மட்டுமின்றி, சமூகச் சீர்திருத்த நோக்கிலும் இராமானுஜரின் வாழ்க்கை முக்கியத்துவம் வாய்ந்தது. இந்தியத் தத்துவ நூல்களுக்கு இவர் அளித்த விளக்கம் விசிஷ்டாத்வைதம் என அறியப்படுகிறது. இத்தகைய விசிஷ்டாத்வைதம் இன்று வரை செழித்து வளர்ந்ததற்கு மிகவும் முக்கியமானவர் இராமானுஜரே.

### பிறப்பு:–

ஆனவந்தாரின் சீடர்களின் முக்கியமானரான பெரியநம்பியின் சகோதரிகளில் மூத்த சகோதரியான ஸ்ரீ பூமிப்பிராட்டியார் மற்றும் ஆசூரி கேசவப் பெருமாளுக்கும் பிங்கள வருஷத்தில் (கி.பி.1017) சித்திரை மாதம் வளர்பிறை, திருவாதிரை நட்சத்திரத்தில் ஆதிசேஷன் அம்சமாக இராமானுஜர் ஸ்ரீபெரும்புத்தூரில் பிறந்தார். அம்மானான பெரிய நம்பிகள் இவருக்கு இளையாழ்வார் என்ற பெயரைச் சூட்டினார்.

### குருவுக்குப் பாடம்:–

உரிய வயதில் உபநயனம் முதலிய சடங்குகள் செய்யப் பெற்று அத்வைத வித்வானான யாதவப்ரகாசர் என்பவரிடம் வேதாந்த நூல்களைப் பயிலத் தொடங்கினார். தான் கல்விகற்கும் காலத்தில் உபநிஷத்திற்கு விரோதமான விளக்கங்களை யாதவப் பிரகாசரிடமிருந்து கேட்டு மனம் நொந்து அதை மறுத்து வேதவாக்கியங்களின் அடிப்படையில் தெளிவான பொருளைத்தந்திட்டார். மேலும் அவரிடம் இருந்து விலகினார் .

### யாதவப்பிரகாசரின் சூழ்ச்சி :–

ஸ்ரீ இராமானுஜருடைய மேதாவிலாசத்தினால் கவலையுற்ற யாதவப்பிரகாசர், பிற்காலத்தில் தம்முடைய அத்வைத ஸித்தாந்தத்திற்கு ஆபத்து ஏற்படுத்திவிடுவார் என பயந்து யாதவபிரகாசர் அவரைக் கொல்ல திட்டமிட்டு இளையாழ்வாரிடம் மீண்டும் தாங்கள் என்னிடம் வந்து சேர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க இராமானுஜர் மறுபடியும் யாதவப்பிரகாசரிடம் வந்து சேர்ந்தார். ஒரு நாள் யாதவப்பிரகாசர் தனது மாணக்கர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு கங்கைக்கு யாத்திரை செல்ல தீர்மானித்து அப்படி

செல்லும் பொழுது இராமானுஜரை கங்கையில் தள்ளி கொல்ல வேண்டும் என்று முடிவு செய்தார். அதன்படி தனது மாணக்கர்களுடன் கங்கா யாத்திரை புறப்பட்டார். விந்தியமலை பிரதேசத்தில் போகும் பொழுது, கோவிந்தபட்டருக்கு யாதவப்பிரகாசருடைய சூழ்ச்சி தெரிய வந்தது. இதனை அறிந்த கோவிந்தபட்டர் ஒரிடத்திலே யாரும் அறியாவண்ணம் இராமானுஜருக்கு தெரிவித்து அவரை தப்பிப் போகும்படி கூறினார்.

<u>எம்பெருமான் பிராட்டியுடன் வேடுவன், வேடுவிச்சியாக இரக்ஷித்தல்:-</u>

இராமானுஜரும் யாரும் இல்லாத காட்டிலே தனியே பிரிந்து நெடுந்தூரம் சென்று ஒரு மரத்தடியிலே நின்று பார்க்க, அப்பொழுது எம்பெருமான் இவருக்கு துணை செய்ய விரும்பி வேடன், வேடுவச்சி போல தோன்ற, இராமானுஜரும் அந்த தம்பதிகளைக் கண்டு கலக்கம் தீர அவர்களை அணுகி தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் ? என்ற வினவ அவர்கள் நாங்கள் வடநாட்டிலிருந்து வருகிறோம். காஞ்சிபுரம் (ஸத்யவிரத க்ஷேத்திரம்) நோக்கிச் செல்கிறோம் எனக் கூற "ஆகில் நானும் உங்களுடனே வருகிறேன், எனக்கு துணை இருக்க முடியுமா ?" எனக்கேட்க வேடனும், நல்லது, அப்படியே போகலாம் என்று சொல்லி முன் செல்ல இராமானுஜரும் அவர்கள் பின்செல்ல, இரவு நேரம் ஆனதால் மூவரும் ஒரு மரத்தடியில் தங்கினார்கள். அப்பொழுது, அந்த வேடுவச்சி, வேடனிடம் தண்ணீர் குடிக்க கேட்க, விடிந்தவாறே நல்ல சுவை நீர் கிடைக்கும் என சொல்லி தேற்றினார். இராமானுஜரோ தனக்கு உதவி செய்தவர்களுக்கு உதவக்கூடிய இடத்திலே நாம் இல்லையே என்ற எண்ணத்துடன் உறக்கம் கொண்டார். பின்பு காலைப் பொழுதானவாறே மூவருமெழுந்து வழிநடக்கத் தொடங்க அந்த தம்பதிகளிருவரும் அருகே ஒரு கிணற்றங்கரைக்கு இராமானுஜரை அழைத்துப் போய், இக்கிணற்றில் இறங்கி ஒரு கை நிறையத் தீர்த்தம் கொண்டு வந்து தருவீராக என்று சொன்னவுடன் ஸ்வாமியும் உடனே கிணற்றில் இறங்கி இரண்டு திருக்கைகளாலும் தீர்த்தம் வாரி எடுத்து மூன்று தரம் கொடுக்க அவர்களும் வாங்கித் தீர்த்தத்தைப் பருகி மறைந்தார்கள். இராமானுஜர் கரையேறி வந்து பார்கையில் அவர்களை காணவில்லை. அருகில் இருந்தவர்களிடம் இது எந்த ஊர் என வினவ புண்யகோடி விமானம் முன்னே தெரியும் போது, இது சாலக் கிணறன்றோ. இது கச்சிப்பதியன்றோ என்று அவர்களும் சொல்ல, வந்தவர்கள் பெருமாளும் தாயாரும் எனத் தெரிந்து அவர்களை சரணாகதி பண்ணி சாலக் கிணற்றிலிருந்து தினம் திருவாராதனத்திற்குத் தீர்த்தம் கொண்டு வந்து கைங்கர்யம் செய்து கொண்டிருந்தார்.

<u>ஆளவந்தார் காஞ்சிபுரம் எழுந்தருளி இராமானுஜரை விசேஷ அனுக்கிரஹம்:-</u>

காஞ்சிபுரத்திலிருந்து ஸ்ரீ ரங்கத்திற்கு யாத்திரை சென்ற ஸ்ரீ வைணவர்கள் காஞ்சிபுரத்தில் ராமானுஜருக்கு எம்பெருமானும் தாயரும் வில்லன், வில்லிகளாக வந்து துணை நின்ற வரலாற்றை கூறக் கேட்டு ஆளவந்தார் இராமானுஜரின் கீர்த்தியைப் புரிந்து கொண்டு, இப்படியொருவர் தோன்றப் பெறுவதே! என வியந்து அவரைக் காண நம்பெருமானிடம் அனுமதி பெற்று திருக்கச்சிக்கு வந்து வரதராஜப் பெருமாளை சேவித்து அவரை மங்களாசாஸனம் செய்து விட்டு கீழே கரிய மாணிக்கப் பெருமாளையும், திருவனந்தாழ்வானையும் சேவித்து விட்டு பிரதக்ஷிணமாக வந்து கொண்டிருந்தார். அப்பொழுது யாதவப்பிரகாசர் தன்னுடைய மாணாக்கர்களுடன் அங்கே வர ஆளவந்தார், திருக்கச்சி நம்பிகளிடம் இந்த கோஷ்டியில் இளையாழ்வார் யார் என கேட்க அவரும் அதோ அந்த கோஷ்டியில் சிவந்த திருமேனி படைத்தவராய் முகத்தில் ஒளிவீசிட வருகிறாரே அவர்தான் என்றுகாட்ட ஆளவந்தாரும் அவரை குளிர நோக்கி "ஆம் முதல்வன்" என்று கொண்டாடி பேரருளாளனிடம் சரணாகதி செய்து, வருங்காலத்தில் வைணவத்தின் நிகரில்லாத தலைவராக ஆவதற்கு அருள் புரிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டும் ஸ்ரீரங்கம் திரும்பினார்.

**ஆளவந்தாரின் குறையை தீர்வு கண்ட மகான்:-**

ஆளவந்தாருடைய ஸ்தோத்ர ரத்தினம் என்னும் துதிப்பாடல்களைக் அறிந்த இராமானுஜர் ஆளவந்தாரைக்காண மிகவும் ஆவலுடன் இருந்தார். இராமானுஜரும், பெரிய நம்பிகளும் ஸ்ரீரங்கம் எழுந்தருள, பெரிய நம்பிகள் திருக்கரம்பன் துறையிலே, பெரும் கூட்டம் இருப்பதை பார்த்து எதிரே வருபவர்களை நோக்கி கூட்டத்திற்கான காரணத்தை வினவ, ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினார் என்பதனை அறிந்து அவரைகாண செல்ல முடியாமல் அவரது மரணத்தில் சரமத் திருமேனியை தரிசிக்க, பெரிய நம்பிகளுடன் சென்றார். ஆளவந்தாரின் ஜீவன் அற்ற திருமேனியைக் கண்டு திருக்கையில் மூன்று விரல்கள் மடங்கியிருக்கக் கண்டு, இவர் திருவுள்ளத்தில் உள்ள மூன்று குறைகளை அறிந்து கொண்டார். அவையாவன:-

i. வியாஸஸூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைதக் கோட்பாடுகள் உள்ளடக்கிய " ஸ்ரீபாஷ்யம் என்னும் கிரந்தத்தைச் செய்ய வேண்டும்.

ii. நம்மாழ்வாருடைய திருவாய் மொழிக்கு ஒருவ்யாக்யானம் செய்தல்.

iii. வேதவ்யாஸர், அவருடைய தந்தையான பராசரர் ஆகியோரிடத்தில் தாம் கொண்ட ஈடுபாட்டினை வெளிப்படுத்திடும் வண்ணம் செயல் புரிந்திட வேண்டும்.

இதனை கேட்ட இராமானுஜர் மூன்று விருப்பங்களையும் தீர்ப்பதாக அரங்கனைத் தியானித்து உறுதியளித்தவுடன் மடங்கி கிடந்த ஆளவந்தாரின் மூன்று விரல்களும் நிமிர்ந்து விட்டன. ஆளவந்தாரின் விருப்பத்தை பின்னாளில் நிறைவேற்றினார். இராமானுஜர் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிக்கு தன்னுடைய சீடரான திருக்குருகைபிரான் பிள்ளானைக் கொண்டு ஆறாயிரப்படி வியக்யானம் செய்தருளினார்.

வயாசர் அருளிய ப்ரஹ்ம ஸூத்திரத்திற்கு காஷ்மீரத்திற்கு சென்று போதாயன விருத்திகிரந்தத்தை கூரத்தாழ்வானுடன் சென்று அறிந்து வ்யாக்யானமாக ஸ்ரீபாஷ்யத்தை அருளினார். கூரத்தாழ்வாருடைய புத்திரர்களுக்கு பராசரர், வேதவ்யாசர் என பெயரிட்டு நம் ஸித்தாந்த ப்ரவர்த்தவர்களாக ஆக்கினார்.

<u>பஞ்சஸமஸ் காரம்:–</u>

காஞ்சி வரதராஜப் பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்த கைங்கர்யம் செய்து வந்தார் இராமனுஜர். காஞ்சி வரதராஜப் பெருமாளுக்கு ஆலவட்டத் திருப்பணியை செய்து பெருமாளின் அன்புக்கு பாத்திரமாய் இருந்த திருக்கச்சி நம்பிகளிடம் சென்று இராமனுஜர் அடியேன் சில நினைவுகள் நினைத்திருந்தேன். அவை விஷயமாக தேவரீர் பேரருளாளனிடம் கேட்டு அடியேனுக்கு நியமித்தருள வேண்டும் என்று பிராத்தித்தார். அவ்வாறே திருகச்சி நம்பிகள் பெருமாளிடத்து விண்ணப்பம் செய்த போது, அதில் கடைசி மற்றும் ஆறாவது வார்த்தையான ஆளவந்தாரின் சிஷ்யரான பெரிய நம்பியை அடைந்து அவரை ஆசாரியராக பெற்றுக் கொள்வது என்ற தேவப்பெருமாளின் கட்டளை ஏற்று பெரிய நம்பியிடம் சென்று பஞ்ச ஸமஸ்காரமும், திருமந்திரம், த்வயம், சரம ஸ்லோகம் உபதேசமும் மதுராந்தக க்ஷேத்திரத்தில் பெற்றார்.

<u>பஞ்சாசார்ய பதாச்ரித:–</u>

இராமனுஜர் ஐந்து ஆசார்யர்களை அடைந்து அர்த்தங்களைக் கேட்டவராதலால், “பஞ்சாசார்ய பதாச்ரித” என்று ப்ரஸித்தராயிருந்தார். (i) பெரியநம்பி பஞ்சஸமஸ்காரமிட்டருளியவராதலால் ஆசாரியர் ஆவார். (ii) திருமலையாண்டான் திருவாய் மொழிப் பொருள் உபதேசித்தவர். (iii) திருமலை நம்பி ஸ்ரீராமயணார்த்தங்கள் ஸாதித்தவர். (iv)ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் திவ்யப் பிரபந்தங்கள் ஸ்தோத்ரங்கள், நல்வார்த்தைகள் அளித்தவர். (v) பெரிய நம்பி பின் அருளிச் செய்ததன் பேரில் திருகோஷ்டியூர் நம்பியிடம் நிதிபோல நின்றிருக்கும் ரஹஸ்யார்த்த விசேஷங்களை அறிந்து கொண்டார்.

ஸ்ரீ ராமானுஜருக்கு பதினெட்டு தடவைகளில் திருக்கோஷ்டியூர் நம்பி அருளிய வார்த்தைகள் பின்வருமாறு:

1. மோக்ஷத்தில் ஆசை உடையவனுக்குச் சம்சாரத்தில் ஆசை நசிச்ச வேண்டும்.
2. சம்சார ஆசை நசித்தால்தான் அஹங்கார மமகாரங்கள் ஒழியும்.
3. அஹங்கார மமகாரங்கள் ஒழிந்தால்தான் உடற்பற்று போகும்.
4. உடற் பற்று போனால் தான் ஆத்ம ஞானம் பிறக்கும்.
5. ஆன்ம ஞானம் பிறந்தால் செல்வம், போகம், இவற்றில் வெறுப்பு உண்டாகும்.
6. செல்வம் போகம் இவற்றில் வெறுப்பு வந்துவிட்டால் எம்பெருமானிடத்தில் பிரேமம் உண்டாகும்.
7. பகவத் பிரேமம் பிறந்தாலொழிய விஷயாந்தர ருசி நீங்காது.
8. விஷயாந்தர ருசி நீங்கினால்தான் பாரதந்த்ரியம் பிறக்கும்.
9. பாரதந்த்ரியம் பிறந்தால் அர்த்த காம ராகத் வேஷங்கள் நீங்கும்.
10. ராகத்வேஷங்கள் நீங்கினால்தான் ஸ்ரீ வைஷ்ணவத்வம் கை கூடும்.
11. ஸ்ரீ வைஷ்ணவத்வம் கை கூடினால் சாத்வீக பரிக்ரஹம் பிறக்கும்.
12. சாத்வீக பரிக்ரஹம் பிறந்தால் பகவத் பரிக்ரஹம் பிறக்கும்.
13. பாகவத பரிக்ரஹம் பிறந்தால் பகவத் பரிக்ரஹம் பிறக்கும்.
14. பகவத் பரிக்ரஹம் பிறந்தாலொழிய அநந்நிய ப்ரயோஜனன் ஆகமாட்டான்.
15. அநந்நிய ப்ரயோஜனன் ஆகாமல் அநந்நியார் ஹ சேஷ பூதன் ஆகமாட்டான்.
16. ஆநந்நியார்ஹ சேஷ பூதன் ஆகாதே அநந்நிய சரணன் ஆகமாட்டான்.
17. ஆநந்நிய சரணன் ஆகாதே அதிகாரி புருஷன் ஆகமாட்டான்.
18. அதிகாரி புருஷனாக ஆனவனுக்கே "திருமந்திரார்த்தம்" கை கூடும்.

## இராமானுஜரின் துறவு:-

இராமானுஜர் தமது மனைவியிடம் மூன்று குற்றங்களை கண்டார்.

1. திருகச்சிநம்பி பக்கலிலே தமது கருத்திற்கு மாறாக நடந்து கொண்டது.

2. ஒரு நாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவருக்கு உணவு இடும் படி கூறிட, உள்ளே அன்னமிருந்தும் இல்லையென்று சொல்லி மறுத்தொழித்தது.

3. பெரிய நம்பியின் மனைவியிடம் கருத்து வேற்றுமைகள் கொண்டது. இம் மூன்றையும் தன் மனைவி அறிந்தே செய்த தவறுகளாகத் தோன்றிய படியால், இராமானுஜர் சந்நியாச ஆச்ரமத்தை பெற்றுக் கொள்ள விரும்பினார். வரதராஜ பெருமான் கோயிலுக்கு சென்று வணங்கியவர் காவி உடை அணிந்தார். திரிதண்டத்தைக் கையில் ஏந்திக் கொண்டார் கோயிலுக்கு அருகே உள்ள குளக்கரையில் வேள்வித் தீ வளர்த்து, தமது இல்லற ஆசைகள் அனைத்தையும் ஒழித்து துறவு நிலைக்குச் சென்றார். இவரது செயலை காஞ்சி வரதரும் அங்கீகரித்தார். அப்போது அங்கு வந்த திருகச்சி நம்பிகள், அப்போது அலர்ந்த தாமரையை போன்ற இராமானுஜருடைய வடிவழகைக் கண்டு, “யதிராஜா” என்று அழைத்து மகிழ்ந்தார். எதி என்றால் துறவி, ராஜர் என்றார் அரசர், துறவிகளுக்கு அரசர் என்று பொருள்படும். எனவே, யதிராஜர் அல்லது எதிரஜர் என்று அழைக்கப்பட்டார்.

## குரு சிஷ்யராக மாறினார் :-

இராமானுசர் இவ்வாறு சந்யாச ஆச்ரமம் மேற்கொண்ட பின் கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் கேள்விப்பட்டு அவர் திருவடிகளிலே வந்து ஆச்ரயித்து பஞ்ச ஸமஸ்காரங்களும் பெற்று வாழ்ந்திருந்தார்கள். இராமானுஜரின் பெருமை நாள்தோறும் வளர்ந்து கொண்டே வந்தது. அதனைக் கண்டு யாதவப்ரகாசருடைய தாயார் நம்முடைய குமாரனும் இவரை அடிபணிந்து வாழலாமே என்று நினைத்து, இந்த மனோரதத்தை மகனிடம் பலகாலும் தெரிவித்து வந்தாள். முன்பே இராமானுஜரின் அறிவுக் கூர்மையை கண்டவர் ஆதலாலும், ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் மூலமாக இராமானுசரது வைபவத்தை அறிந்தவர் ஆதலாலும், யாதிராஜரது திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து, கண்ணும் கண்ணீருமாய் நின்று வேண்டிட, இராமானுசரும் அவரை தம் சீடராக ஏற்றுக் கொண்டார். யாதவப்ரகாசரும் சந்நியாச தர்மத்தை ஏற்று முக்கோல் பிடித்த முனிவராக விளங்கினார்.

## இராமானுஜ சித்தாந்தம்:–

"வேதாத் சாஸ்தரம் பரம் நாஸ்தி" என்று கூறியபடி வேதங்கள் உயர்ந்த சாஸ்திரம் ஆகும், வேதங்களில் உரைக்கப்பட்ட மெய்பொருளானது, நம்முடைய ஸநாதன தர்மம் என்று அறியப்படுகிறது. அந்தமில்லா மறைகள் உரைக்கும் பொருள் ஒன்றே. ஸ்ரீமத் நாராயணனே பரதத்துவம், பல்வேறு உயிரினங்களும் இல்வுலகமும் அவனுக்கு உடலாய் இருப்பவர்கள். அவன் அவைகளுக்கு ஆத்மாவாய் இருக்கிறான். இக்கருத்தையே ஸ்ரீ நம்மாழ்வார். "உடல் மிசை உயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன்" என அருளிச் செய்திருக்கிறார். இப்படிப்பட்ட, எம்பெருமானையே வேதங்களும் உபநிஷத்துகளும் பரமாத்மா, பரஞ்சோதி, பரதத்துவம், ப்ரஹ்ம என்று போற்றுகின்றன. பகவான் "ஒத்தார் மிக்கார் இல்லாத மாமாயன்" என்று சொல்லக்கூடிய தனக்கு ஒப்பு உயர்வு இல்லாத அனைத்து கல்யாண குணங்களும் உடையவனாய் தோஷமற்றவனாய் விளங்குகிற இத்தன்மையால் அவரின் அனைத்து பொருட்களிலிருந்தும் வேறுபட்டு ஸர்வ விலக்ஷணனாக விளங்குகிறான்.

நம் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் மிக முக்கியமான சரணாகதி தத்துவத்தை எல்லோருக்கும் மனதில் புகும்படி பகவத் இராமானுஜர் தம்முடைய கத்யத்ரயம் என்ற நூலில் வெகு விமர்சையாக எடுத்துரைத்துள்ளார். பங்குனி உத்திரத் திருநாளன்று ஸ்ரீ ரங்கநாதனும், தாயாரும் எழுந்தருளியிருக்கும் சேர்த்தி சேவையில் தாயாரை புருஷகாரமாக பற்றி உலகம் உய்வதற்காக சரணாகதிகத்யம் சாதித்தார்.

## கத்யத்ரயத்தின் சுருக்கம்:–

கத்யத்ரயம் என்ற நூல், பெயருக்கு ஏற்ப மூன்று செய்திகளைக் கூறுகிறது. அவை சரணாகதி கத்யம், பிரபத்தி என்ற சரண் புகுதலைப்பற்றியது. ஸ்ரீரங்க கத்யம் ரங்கநாதப் பெருமானிடம் தன்னையே தாசனாக்கி கொள்ளும்படி வேண்டுவது. வைகுண்டகத்யம் மகாவிஷ்ணுவின் இருப்பிடமான ஸ்ரீவைகுண்டத்தை நேரில் பார்ப்பது போல் விவரிக்கிறது.

இதன்படி அடியார்கள் தன்னை எளிதாக அடைவதற்காகவே எம்பெருமான் பல வடிவு கொண்டு நம்மிடையே தோன்றுகிறான். அவனை அடைந்து அவனுக்கும் (கைங்கர்யம்) அவனுடைய அடியவருக்கும் கைங்கர்யம் செய்வதே பாமபுருஷார்த்தம் என்பது ஸ்ரீவைணவமதத்தின் அடிப்படைக் கொள்கை. இப்பெருளை ஸ்ரீ ஆழ்வார், " நடையாவுடைத் திருநாரணன் தொண்டர் தொண்டர் கண்டீர், இடையார், பிறப்பிடைதோறும் எமக்கு எம்பெருமக்களே" என்றும் "வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்று உள்கலந்தார் அடியார்தம் அடிலார் எம்மடிகளே" என்றும் எடுத்துரைக்கிறார்.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக 'பெரும்புதூர் தந்த வள்ளல்' என்று போற்றப்படுகிற ஸ்ரீ ராமானுஜர், இந்த சித்தாந்தத்திற்கு மெருகுட்டினார். இம்மதம் ஸ்ரீராமானுஜருக்கும் பிறகு ஓரண் வழியாக இன்றளவும் ஸ்ரீவைணவ ஆசார்யர்களால் கடைபிடிக்கப்பட்டு உபதேசிக்கப்படுகிறது.

**இராமானுஜரின் எளிமையும் பெருமையும் :-**

ஆசார்யர்கள் பொதுவாக அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர் என்றும், க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்று இரண்டு வகைப்படுவர்கள். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்திப்ரஸ்ந்நாசார்யர்கள் ஆவார்.

சிஷ்யப்ராத்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கை இன்னருளால் தாமாகக் கனித்து "பயனன்றாகிலும், பாங்கல்லராகிலும் செயல் நன்றாக திருத்திப்பணி கொள்வதையே விரதமாகக் கொண்டு தன் பேராக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ரப்ரஸ்ந் நாசார்யர்கள் ஆவர். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் ஒருவரே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்ற பட்டத்தை முதன்மையாக பெற்றவர்.

யதிராஜர், பாஷ்யகாரர், எம்பெருமானார், உடையவர் என்றெல்லாம் சிறப்பாக அழைக்கப்படும் ஸ்ரீ ராமானுஜர் வைணவத்தையும், ஆன்மிகத்தையும் மட்டும் வாழ்விக்கவில்லை. உலகெங்கும் தோன்றிய மனிதர்கள், தங்கள் அறியாமையை போக்கி, அவர்களைக் கடைத்தேற்ற வேண்டிய கருணையும் சீடர்கள் மேல் பாசமும் கொண்டு மிகுந்த எளியவராகவும், அடக்க முள்ளவராகவும் வாழ்ந்து தன்னைப் பின்பற்று பவர்களுக்கு நல்ல ஆதரவு தந்து வாழ்ந்திருக்கிறார்.

திருமங்கையாழ்வார் பிறந்த திருநகரிக்கு ராமானுஜர் ஒரு முறை தன்னுடைய சிஷ்யர்களுடன் சென்றார். தாழ்ந்த குலப்பெண் ஒருத்தி எதிரில் வருவதைக் கண்ட சிஷ்யர்கள் அவளை ஒதுங்கச் சொன்னார்கள். "இங்கே வலதுபுறம் பெருமாள், இடதுபுறம் திருமங்கையாழ்வார். நான் யார் பக்கம் ஒதுங்குவது ? ஆண்டவன் பக்கமா, ஆழ்வார் பக்கமா என்று கேட்டாள். தன் சிஷ்யர்களின் தவறுக்கு ஏற்ற தக்க பதில் கிடைத்தது என்று எண்ணிய எம்பெருமானார் அப்பெண்ணை வைணவ மரபில் சேர்த்தார்.

இதுபோல் தன் சீடர்களுக்கு மற்றும் ஒரு அனுபவத்தையும் எடுத்துக் காட்டினார். திருமலைக்கு தன் சீடர்களுடன் சென்று கொண்டிருந்தபோது, வழிகாட்டி பலகைகளும், மைல்கற்களும் இல்லாததால் திருமலைக்கு செல்லும் வழியே அடையாளம் காண முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தார். அங்கு கிணற்றிலிருந்து நீரை இறைத்துக் கொண்டிருந்த

விவசாயினிடத்தில் திருமலைக்குச் செல்லும் வழியைக் கேட்டார், உடையவர். அவர் தனது கையை நீட்டி அதோ தெரிகிறதே அதுதான் திருமலை என்று அடையாளம் காட்டினார். உடனே உடையவர் அங்கேயே அவருக்கு தெண்டனிட்டு சேவித்து நன்றி கூறினார். சீடர்கள் திகைத்து விளக்கம் கேட்டதற்கு " இறைவன் இருக்குமிடத்தைக் காட்டும் எல்லாருமே ஆச்சார்யர்கள் என்று கூறினார்.

சில காலம் மேல்கோட்டை திருநாராயணபுரத்தில் இருக்கும் போது அங்கு விவசாயம் செய்வதற்கு நீரில்லாமல் விவசாயிகள் தவிப்பதைக் கண்டு மனம் வருந்தி, தன்னை ஆதரிப்பவர்களைக் கொண்டு மிகப் பெரிய ஏரியை நிர்மானித்து உபரி நீரை அதில் தேக்கி அவர்களுடைய வாட்டத்தைப் போக்கினார் இராமானுஜர்.

<u>பெரிய பெருமாளுடைய பேரருள் :–</u>

சந்நியச ஆச்ரமத்தை மேற்கொண்ட எம்பெருமானார், பேரருளாளனின் அனுமதியோடு ஆழ்வார் திருவரங்கம் பெருமாள் அரையருடன் ஸ்ரீரங்கம் எழுந்தருளினர். கூரத்தாழ்வானும், முதலியாண்டானும் எம்பெருமானாரோடு ஸ்ரீரங்கம் சென்றனர். எம்பெருமானார் நம் பெருமாள் சன்னதிக்கு வந்து சேர்ந்து தெண்ணீர்ப் பொன்னியிலே தீர்த்தமாடி தம்முடையை கடமைகளை முடித்துக் கொண்டு அரவணைமேல் பள்ளி கொண்ட முகில் வண்ணனைக் கண்ணாரக் கண்டு அடியேன் மீது இப்படியும் அருள் வெள்ளம் பெருகுவதே என்று ஈடுபட்டு நிற்கையில் பெரிய பெருமாள் தமது திருப்பொலிந்த சேவடியை இவரது சென்னிமேல் பொறித்து, " இராமானுசரே, பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் என்கிற உபயவீபூதி. அதாவது அழியும் தன்மையது, லீலா விபூதி, என்றும் அழியா தன்மை படைத்தது, நித்ய விபூதியாகிய ஸ்ரீ வைகுண்டம், இந்த இரண்டு விபூதிகளுக்கும் உடையவராக இராமானுசர் நியமிக்கப் பெற்றதால் அவருக்கு உடையவர் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது, செல்வத்தையும் உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம். இனி நம்முடைய கோயிலைத் திருத்திப்பணி கொள்ளக்கடவீர் என்று நியமித்தருளினார். இங்ஙனே பெரிய பெருமாளுடைய பேரருளைப் பெற்ற அன்று முதலாகவே "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே" என்கிற வாழ்த்து தெளிவுற அனைத்துக் கைங்கர்யங்களையும் ஆராய்ந்தருளி நாள்தோறும், பக்ஷந்தோறும், மாதந்தோறும், ஆண்டுதோறும் உத்ஸவங்களை நடைபெறும்படி முறைகளை வகுத்தருளினார். கோவில் ஒழுகு என்னும் கோவில் வரலாற்று நூலில், இராமானுஜர் நிர்வாக ஏற்பாடுகள், அதற்காக அவர் நியமித்த பணியாளர்கள் முதலான அனைத்து விவரங்களும் உள்ளன.

**கோயில் வழிபாட்டில் அரையர் சேவை :—**

இராமானுஜர் கோவில் வழிபாட்டில் முக்கியமாக அரையர் சேவையை இணைத்தார். ஆழ்வார்களுக்கு பிரதிநிதியாய் அரையர்களை நியமித்தார். இவர்கள் பெருமாள் திருமுன்பும் நாச்சியார் திருமுன்பும் உற்சவ காலங்களில் பதிகத்தின் முதல் பாடலை இசையோடு பாடுவார்கள் அடுத்து பாசுரங்களை அபிநயத்தோடு நடித்துக் காண்பிப்பது என்ற முறையை திருவிழாக்காலங்களில் உறுதியாக நடக்க வேண்டும் என்று இராமானுஜர் ஏற்படுத்தித்தந்தார்.

**எம்பெருமானார் அருளிச் செய்த திரந்தங்கள் :—**

| | | |
|---|---|---|
| 1.<br>2.<br>3. | ஸ்ரீ பாஷ்யம்<br>வேதாந்த தீபம்<br>வேதாந்த சாரம் | வ்யாஸ பகவான் அருளிச்செய்த வேதஸாரமாகிற பரஹ்மசூத்ரங்களுக்கு அற்புதமான வ்யாக்யான க்ரந்தங்கள் |
| 4. | வேதாந்த ஸ்ங்க்ரஹம் | வேதவாக்யங்களுக்கு அற்புத வயாக்யானம் |
| 5. | ஸ்ரீகீதா பாஷ்யம் | ஸ்ரீமத் பகவத்கீதைக்கு விசிஷ்டாத்வைதபரமான வ்யாக்யானம். |
| 6.<br>7.<br>8. | சரணாகதி கத்யம்<br>ஸ்ரீ வைகுண்ட சத்யம்<br>ஸ்ரீ ரங்க கத்யம் | உரைநடை நூல்கள் |
| 9. | நித்யம் | தினந்தோறும் அனுஷ்டிக்க வேண்டியவை |

**சீடர்களுக்கு அருளிய அறிவுரை :—**

ஒதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்கி இருப்பது ஞானிகளின் மரபுவழி, அந்நிலையில் கருணோதயன் இராமாநுசர் தம் இறுதிக் காலத்தில் தம் சீடர்களுக்கு அருளிய சில உபதேசங்களின் சாரம் :—

1. திருமாற்பேற்றுப் பாதையில் விலகாமல் நடக்க வேண்டும்.
2. வைணவர்களை மதித்துப போற்றுங்கள்; அவர்கள் உங்கள் நண்பர்கள்.
3. பரமனைப் பகைப்பவர்கள் எதிரிகள்; எதிரிகளிடமிருந்து ஒதுங்கி, இடைவிடா பாவனையால் இறைவனைத் தேடுவாய்.
4. நண்பர்களை இன்முகத்துடன் வரவேற்று மகிழுங்கள்; உதவிகளைத் தட்டாமல் செய்யுங்கள்.

5. மனிதனின் சத்ரு ஆசை; ஆதலால் உலகியல் வழியில் வாழ்பவர்களைக் கருத்தில் கொள்ள வேண்டாம்.

6. நீங்கள் எதையும் பகைவர்களிடமிருந்து யாசிக்காதீர்கள்; உங்களுக்கு அருளுவதற்குப் பரமன் எப்பொழுதும் சித்தமாக உள்ளான்.

7. ஆசாரியர்களின் உபதேசங்களில் ஆழ்ந்த நம்பிக்கைக் கொள்ளுங்கள்.

8. உணர்வுகளைப் பற்றற்று வைத்துக் கொள்ளுங்கள். துறவு என்பது ஆசையைத் துறப்பதே தவிர, செயலைத் துறப்பது அல்ல.

9. உலக ஞானத்தைத் தவிர்த்து, இறைஞானத்தில் கவனம் செலுததுங்கள். எல்லாச் செயல்களும் பகவான் தொண்டு என்று செய்யுங்கள்.

10. பரமனது திருநாமங்களிலும், அவனது மகிமைகளிலும் ஈடுபடுங்கள்.

11. அடியார்களின் சீர்மைகளிலும் மகிமைகளிலும் பக்தி கொள்ளுங்கள்.

12. தன்னலம் தவிர்த்து அடியார்களுக்குத் தொண்டு செய்யுங்கள்.

13. தினமும் ஒரு மணி நேரமாவது ஆசாரியனுடைய பெருமையை நினைத்து தியானம் செய்யுங்கள். குருவின் பாதகமலத்தில் குறைவிலாப் பக்தி வைப்பாய்.

14. நாளும், ஆழ்வார்கள், ஆசாரியர்களின் அமுத வாக்குகளைப் படியுங்கள்.

15. நல்லோர் இணக்கம் அவசியம், தீயோர் இணைக்கம் நரகத்திற்குச் செலுத்தும்; அதனால் அதைத் தவிர்ப்பது நல்லது.

16. பரமனின் தூய விக்கிரங்களில் அவன் நிறைந்திருக்கிறான்; பக்தியால் அவனை வணங்குங்கள.

17. பரமனின் தீர்த்தம் வெறும் தண்ணீர் அல்ல; புனிதமானது.

18. அடியார்களை அவர்களின் சாதி கருதி உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்று கருதாதீர்கள்.

19. வருங்காலம் பற்றிய கவலை நீங்கி, பரமனின் திருவடிகளில் உங்களை ஒப்புவித்து விடவும்.

20. தத்தம் கர்மங்களின் படி நிகழ்காலம் நடைபெறுவதால், நம் கடமைகளைத் தொண்டாகச் செய்யவும்.

21. ஸ்ரீ பாஷ்யத்தைப் பயின்று அதைப் பிறருக்கும் கற்பிக்க வேண்டும்.

22. திவ்வியப் பிரபந்தங்களை நன்கு கற்று, தக்க சீடர்களுக்ககுக் கற்பியுங்கள்.

23. திவ்விய தேச திருக்கோவில்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமானுக்குத் தொண்டு செய்யுங்கள். கற்பித்த திருவுருவங்களுக்குத் தத்துவ நுட்பங்கள் உண்டு. முழுமுதற் பொருளின் அருட்சுடர் அவர்களிடம் நிறைந்துள்ளது.

24. இறைவழிபாடு உலக வாழ்விற்கு வேண்டற் பாலது. வழிபாடு உயிர்களின் இயற்கை. தற்பயன் கருதாது செய்யும் வழிபாடே கடவுளுக்குரியது. தேகாதி மூன்றையும் (உடல், பொருள், உயிர்) திருமால் திருவடிக்கே அர்ப்பணிக்க வேண்டும்.

25. அன்புப் பெருக்குக்கு அடிப்படை வழிபாடு. வழிபாடு உயிர்க்கு உறுதி பயப்பது. இறைவன் அன்பிற்கு எளியவர்.

26. அன்பின்றி அறிவு விளக்கமுறாது. அன்பில்லா அறிவு அறிவாகாது. அன்பினின்றும் அரும்பும் அறிவு மெய்யறிவு, கடவுளறிவு, பேரறிவு ஆகும்.

27. அமைதியுற்ற வாழ்வு நல்வாழ்வு, அன்பு நெறியில் வாழ்வு அமைதியுறும்.

28. அகமே புறம் என்ற நிலை மலர வேண்டும். அகம் புறம் வேற்றுமை களையப்பட வேண்டும். புலனும் மனமும் ஒழுங்கு பட்ட உள்ளத்தில் பிரமம் விளங்கும்.

29. மனம், மொழி, மெய் மூன்றாலும் இறைவனை நினைப்பதும், துதிப்பதும், வணங்குவதும் தான் தவம். தவத்தின் பயன் ஞானம். ஞானம் ஒன்றே ஆன்ம மற்றும் சமுதாய நோய்களைத் தீர்க்கும். ஞானத்தின் பயன் இறை பேரின்பம்.

30. தரும தத்துவங்களை அறிந்தவன் பெரியயோன்.

31. எப்பொழுதும் சந்துஷ்டியுடனும் நன் நடத்தையுள்ளவனும் சாது.

32. சத்தியமும் மனத் தூய்மையும் உள்ளவன் சுத்தன்.

33. கர்வமில்லாத கல்வியும் தியாகமும் திருமாலிடம் சேர்ப்பிக்கும்.

34. ஆசையற்றவனின் தெய்வ வைராக்கியத்தால் தவம் கை கூடும்.

35. நிறைய படித்தும் சாதுவாய் இருப்பவன் பண்டிதன்.

36. திருமால் தியானம் பாபத்தின் எதிரி என அறியவும்.

37. வேதங்களின் தொடக்கமும் லயமும் "ஓம்" ஆகையால் "ஓம்" என்ற ஓங்கார தியானம் சிறந்தது.

38. மானசீகம், வாசீகம் (வாக்கு), காயம் (செயல்) ஆகியவற்றால் திருமால் வழிபாடு அவசியம்.

39. அறம், உண்மை, பெருமை திருமாலின் கீர்த்தி என உணர வேண்டும்.

40. பிறப்பினால் தாழ்ச்சியில்லை – தூணில் பிறந்தவர் நரசிம்மர். ஆகையால் திருமால் அடியார்கள் யாராயிருப்பினும் போற்றுதல் நம் கடமை.

41. "ஏகம் ஏவா" என்று வேதம் கூறுகின்றது. ஒன்றே தான் என்பது இதற்குப் பொருள். கடவுள் ஒருவரே; அவரை வேதப் பொருள் என்று வணங்க வேண்டும். நம் திருமாலுக்கு அது சேரும் என்றார்.

42. தினமும் மூன்று அந்திமப் பொழுதில் இறைவனை வணங்க வேண்டும். முடியவில்லை யென்றால் இரு பொழுதாவது – காலை, மாலை வழிபடுதல் நலம்.

43. பிறருக்கு வரும் துன்பம் தனக்கு வந்ததாகவே நினைந்து உதவி செய்பவன் தான் வைணவன்.

44. தன்னால் பிறருக்கு சங்கடங்கள் கொடுக்காதவன் தான் உண்மை வைணவன் என்றார்.

45. அடக்கம், நிலையான மனது, பத்தி இவற்றால் மட்டும் புருஷோத்தமன் பார்கப் படுகிறான்.

46. மாறுபாடற்ற ஆழிவற்ற ஞானமே பிரமம்.

47. மகிழ்ச்சியளிப்பதோ துயரமளிப்பதோ பொருட்களின் குணமின்று. அதை அடைவோரின் வினைகட்கேற்ப அமைகிறது. அவரவர் வினைகட்கேற்ப பொருள்களில் இம்மாறுபாடு தோன்றுகிறது.

48. மேற்கண்ட அறிவுரைகளைக் கடைப்பிடிக்க முடியாவிட்டால் திருநாராயணபுரத்தில் அமைதியாக வசியுங்கள்.

49. இதுவும் முடியாதென்றால் பரமன் அல்லது ஆசாரியனிடம் தன்னை முழுமையாக ஒப்புவித்துவிட்டு, திருமால் திருமந்திரத்தைத் தியானம் செய்து கொண்டு இருங்கள்.

50. இவைகள் எதுவும் மேற்கொள்ள முடியவில்லை என்றால் அகங்காரம் மமகாரம் நீங்கி, பற்றற்ற வைணவனை நாடி அருள் புரியும்படி வேண்டிக் கொள்ளுங்கள். அதுவே உங்கள் நல்வாழ்விற்கு வழி கோலும்.

## இராமானுஜரால் நியமிக்கப் பெற்ற ஆசாரியர்கள் :-

1. ஆலவந்தார் குமாரர் சொட்டை நம்பி, அவர் குமாரர் என்னாச்சான், அவர் குமாரர் பிள்ளையப்பன்.
2. பெரிய நம்பி குமாரர் புண்டரீகர்.
3. திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான்.
4. திருமாலையாண்டான் குமாரர் சுந்தரத் தோளுடையார்.
5. பெரிய திருமலை நம்பி குமாரர் ராமாநுஜனும், பிள்ளை திருமலை நம்பியும்.
6. கூரத்தாழ்வான் குமாரர் பட்டரும், சீராமப்பிள்ளையும்.
7. முதலியாண்டான் அவர் குமாரர் கந்தாடை யாண்டான்.
8. நடுவிலாழ்வான்.
9. கோமடத் தாழ்வான்.
10. திருக்கோவிலூர் ஆழ்வான்.
11. திருமோகூர் ஆழ்வான்.
12. பிள்ளைப் பிள்ளையாழ்வான்.
13. நாடாதூர் ஆழ்வான்

14. எங்களாழ்வான்.

15. அருந்தாழ்வான்.

16. மிளகாழ்வான்

17. நெய்யுண்டாழ்வான்

18. சேட்டலூர்ச் சிறியாழ்வான்

19. கோவிலாழ்வான்

20. வேதாந்தி யாழ்வான்

21. உடக்கலாழ்வான்

22. அரணபுரத்தாழ்வான்

23. எம்பார்

24. கிடாம்பியாச்சான்

25. கணியநூர்ச் சிறியாச்சான்

26. ஈச்சம்பாடி யாச்சான்

27. கொங்கிலாச்சான்

28. ஈச்சம்பாடி சீயர்

29. தருமலை நல்லாள்

30. சட்டம்பள்ளிச்சீயர்

31. திருவெள்ளரைச் சீயர்

32. ஆட்கொண்டவல்லி சீயர்

33. திருநகரிப்பிள்ளான்

34. காராஞ்சி ஸோமயா ஜீயர்

35. அலங்கார வேங்கடவர்

36. நம்பிகருந்தேவர்

37. சிறுப்புள்ளி தேவராஜ பட்டர்

38. பிள்ளளையுறந்தையுடையார்

39. திருக்குருகைப் பிரான் பிள்ளை

40. பெரிய கோவில் வெள்ளாலர்

41. திருக்கண்ணபுரத்தரையர்

42. ஆசூரிப் பெருமாள்

43. முனிப்பெருமாள்

44. அம்மங்கிப்பெருமாள்

45. மாருதிப் பெரியாண்டான்

46. மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான்

47. ஸோமாஸியாண்டான்

48. சீயராண்டான்

49. ஈஸ்வராண்டான்

50. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்

51. பெரியாண்டான்

52. சிறியாண்டான்

53. குறிஞ்சியூர் சிறியாண்டான்

54. அம்மங்கியாண்டான்

55. ஆவைந்தாராண்டான்

56. அருளாளப்பெருமான் எம்பெருமானார்

57. தொண்டலூர் நம்பி

58. மருதூர் நம்பி

59. மழுவூர் நம்பி

60. திருக்குருங்குடி நம்பி

61. குறவை நம்பி

62. முடும்பை நம்பி

63. வடுக நம்பி

64. வங்கிபுரத்து நம்பி

65. ஸ்ரீ பராங்குச நம்பி

66. அம்மங்கியம்மாள்

67. பருத்திக் கொல்லையம்மாள்

68. உக்கலம்மாள்

69. சொட்டையம்மாள்

70. முடும்பையம்மாள்

71. கொமாண்டூர் பிள்ளை

72. கொம்ாண்டூர் இளையவல்லி

73. கிடாம்பிப்பெருமாள்

74. ஆர்க்காட்டுப் பிள்ளை

<u>எம்பெருமானாரிடம் ஆச்சார்யரான திருகோஷ்டியூர் நம்பியின் க்ருபை:-</u>

**"தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே"** என்கிறபடியே ஸ்ரீ ரங்கநாதனுடைய செல்வங்களை யெல்லாம் திருத்தி நிர்வாக நடைமுறைகளை புகுத்தி, பல கொத்துக்களை ஏற்படுத்தி இராமானுசர் வாழ்ந்தருளுங்காலத்திலே கோயில் கைங்கர்யபரர்கள் ஆசாரஅநுஷ்டான சீலர்களாய் இல்லாதிருக்கக் கண்டு, அவர்களைத் திருத்திப்பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றியிருக்கையில், அவர்களிலே சிலர் 'இவர் கீழே நம்மால் வாழ முடியாது;

இவரைக் கொல்வதே நமக்கு நலம் பயக்கும் செயலாகும்' என்று எண்ணி, இராமானுசர் மாதுகரம் எனப்படும் இல்லறத்திலே வாழ்வோர் கரங்களாலே பதார்த்தங்களைப் பெற்று சந்நியாசியானவன் வாழ்நாளைக் கடத்தவேணும் என்ற யதிதர்ம கோட்பாட்டிற்கிணங்க பிக்ஷைக்கு எழுந்தருளுமிடத்து விஷங்கலந்த ப்ரஸாதமிடும்படி நிர்ப்பந்தத்தாலே செய்விக்க, அப்படியே ஒரு நாள் கிடைத்த ப்ரஸாதத்தின் தீமையை அறிந்து அதைத் திருக்காவேரியிலே கரைத்திட்டு அன்று தொடங்கி சிலநாள் வரையில் உணவு ஏதும் உட்கொள்ளாமல் இருக்க இதைத் திருக்கோட்டியூர்நம்பி கேட்டருளி அப்போதே புறப்பட்டு ஸ்ரீ ரங்கத்திற்கு எழுந்தருளி, இராமானுசருடைய சிஷ்யவர்க்கங்களில் கிடாம்பியாச்சன் ஒருவரே இரமானுசர் திருமேனியில் பரிவுடையவர் என்று அறிந்து, அவரைத் திருமடைப்பள்ளிக் கைங்கர்யத்திலே (உணவு தயாரிக்கப்படும் இடத்திலே) நியமித்தார். அன்று முதலாக ஆச்சானே ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்கான பரிசாரகராக இருந்து வந்தார்.

<u>இராமானுஜரின் கட்டளைகள்:-</u>

1. ஆழ்வார்கள் இயற்றி நாலாயிர திவ்ய ப்ரபந்த பாசுரங்களைப் படிக்க வேண்டும். மற்றவர்களையும் படிக்கச் சொல்ல வேண்டும்.

2. நூற்றெட்டுத் திருப்பதிகளில் (திவ்ய தேசங்களில்) காட்சி தரும் எம்பெருமான்கள் கோயில் வழிபாட்டுக்கு உதவி செய்து, வழிபாடுகளைக் குறையில்லாமல் செல்வனே நடத்த வேண்டும்.

3. மைசூர் மாநிலத்தில் உள்ள மேல் கோட்டை என வழங்கும் திரு நாராயணபுரத்தில் ஒரு குடிசையாகிலும் கட்டிக்கொண்டு அங்கு தங்கியிருந்து தினமும் சம்பத் குமாரராகிய திருநாராயணப் பெருமாளை வணங்கி வழிபட வேண்டும்.

4. திருமால் (பெருமாள்) தாயாருக்கு (திருமகளுக்கு) முதன் முதல் உபதேசித்த கீழ்க் கண்ட 'துவய மந்திரத்தையும்' அதன் பொருளையும் ஆசார்யன் மூலமாக அறிந்து தினமும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்.

   துவய மந்திரமாவது: ஸ்ரீ மந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:

5. திருமால் அடியார் ஒருவரை நண்பராகவும், துணைவராகவும் பெற்று அவருடன் சேர்ந்து திருமால் நெறிகளைப் பின்பற்றி வாழ வேண்டும்.

6. ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்தும், மற்றவர்களையும் படிக்கச் சொல்ல வேண்டும்.

7. திருமாலுக்கு (பெருமாளுக்கு) நாம் அடிமை என்பதை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஆத்மா, மற்றும் உடலால் துன்பப்படும் மக்களுக்கு ஐயோ! ஏன்று இரங்கி, கருணை காட்டி அவற்றைப் போக்கித் தொண்டனாக வாழ வேண்டும்.

<u>ஆண்டாள் நாச்சியாரிடத்தில் இராமானுஜரின் பற்று:-</u>

ஆண்டாள் நாச்சியார் அருளிச் செய்த திருப்பாவையை மிகவும் பரவசமாக இராமனுஜர் மாதுகரத்தின் பொழுது சேவித்துக் கொண்டே வருவார். அவர் "திருப்பாவை ஜீயர்" என்று போற்றப்பட்டார்.

ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழியில், திருமாலிருந்சோலை அழகர் மீது பாடிய பதிகத்தில்.

"நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை

நம்பிக்கு நான் நூறு தடாவில் வெண்ணெய்

வாய் நேர்ந்து பரவி வைத்தேன்

நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்."

என்ற பாசுரத்திற்கு ஏற்ப, ஆண்டாள் நாச்சியார் விருப்பப்பட்டதை இராமானுஜர் திருமாலிருஞ் சோலை அழகருக்கு செய்து சமர்பித்தார். அதனால் மகிழ்ச்சியடைந்த ஆண்டாள் நாச்சியார் இராமாநுஜரை அசரீரியாக 'அண்ணா' என அழைத்தாள் அன்று முதல் உடையவர் "கோயிலண்ணா" ஆனார். எனவே தான் ஆண்டாளை "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்று போற்றுவர்.

## பாகவத அபசாரங்களும், அவற்றின் நிவ்ருத்தி உபாயங்களும்

'காரேய் கருணை இராமானுசன்' என்றும் 'பழியைக் கடத்தும் இராமானுசன்' என்றும் 'பொற்கற்பகம் எம் மிராமானுசன்' என்றும் அடியார்களான சீடர்களுக்கு அன்னையாகி, அத்தனாகி, ஆளும் எம்பிரானுமாகி தாரக, போஷக, போக்யங்களாக விளங்கியவர் ஸ்ரீ ராமானுஜர்.

ஒரு சமயம், உடையவரது சீடர்கள் அவரை அணுகி பாகவத அபசாரங்களைப் பற்றியும் அவற்றை நிவ்ருத்தி செய்யும் உபாயங்களைப் பற்றியும் அடியோங்களுக்கு அருளிச் செய்ய வேண்டும் என்று ப்ரார்த்திக்க, அதற்கு எம்பெருமானர். ஸ்ரீ வைஷ்ணவர்களான பாகவதர்களிடம் ஏற்படும் அபசாரங்கள் பன்னிரெண்டு வகைப்படும்.

**அவைகள்:**

1. **ஜனம் நிரூபணம்** : ஜாதியையிட்டு பாகவதர்களை தாழ நினைப்பது. எம்பெருமானுக்கு அடியானான வேளாளனையோ, வேடனையோ, சண்டாளனையோ அவனுடைய ஜாதியை மாத்ரம் நினைத்து தாழ நினைப்பவன் நரகத்தை அடைகிறான். இவ்வுலகின்கண் அனைத்து ஜாதிகளிலுமே ஏதாவது ஓர் காரணத்தினால் யோகிகள் பிறக்கின்றார்கள். அனைத்து உயிர்க்கும் நாதனான ஸ்ரீமந்நாராயணனை நேரில் கண்ட அவர்களுடைய குலம், அறிவு, ஒழுக்கம் முதலானவற்றை ஆராய்ந்து இகழலாகாது என்ற புராண வசனத்தின்படி ஸ்ரீவைஷ்ணவர்களை ஜாதியைப் பார்த்து இகழ்வது அபசாரமாகும்.

2. **ஸரீர நிரூபணம்** : ஸ்ரீவைஷ்ணவர்களின் உடம்பைப் பார்த்து புருஷன், ஸ்த்ரீ, பாம்பு, பறவை, விலங்கு, அசுரன், முதலான ஸரீர வேறுபாடுகளைப் பார்த்து அவர்களை இகழ்வது அபசாரமாகும்.

3. **பாவ நிரூபணம்** : அஸ்தி (இருக்கிறது) ஜாயதே (பிறக்கிறது) வர்த்ததே (வளர்கிறது), அபக்ஷீயதே (குறைகிறது), பரிணமதே! (விகாரமடைகிறது), விநஸ்யதி (அழிகிறது) என அசேதனப் பொருள்கள் அனைத்துக்குமுள்ளதான ஆறு வகைப்பட்ட விகாரங்களில் சேர்ந்ததான பால்யம், யௌவனம், முதுமை முதலான வயஸ்ஸீக்களை பாகவதர் விஷயத்தில் ஆராய்ந்து அவர்களை இகழ்வது அபசாரமாகும்.

4. **ஆஸ்ரம நிரூபணம் :** ப்ரம்ம சர்யம், 2) க்ருஹஸ்த நிலை, 3) வாநப்ரஸ்த நிலை, 4) ஸ்ந்யாஸி நிலை என்ற நான்கு ஆஸ்ரமங்களில் இன்ன ஆஸ்ரமத்தைச் சேர்ந்தவர் என ஆராய்ந்து இகழ்வது அபசாரமாகும்.

5. **அவயவ நிரூபணம் :** ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திருமேனியிலோ, அவயவங்களிலோ உள்ள தோஷங்களைப் பார்த்து இகழாமல் அவர்களுக்குள்ள ஸ்வஸ்ரூப, பரஸ்வரூப ஜ்ஞானமே அக்குறைகளை நிறைவு செய்துவிடும் என்று நினைக்காமல் இகழ்வது அபசாரமாகும்.

6. **ஆலஸ்ய நிரூபணம் :** ப்ரபந்நனானவன் தன்னுடைய சோம்பலாலே உடம்மை ஸ்நாநாதிகள் செய்யாமல் உபேக்ஷித்திருக்கையாலே அவ்வுடலில் ஏற்படும் துர்நாற்றம் முதலியவற்றைக் கண்டு இகழ்வது அபசாரமாகும்.

7. **வாஸ நிரூபணம் :** கோயில், திருமலை, பெருமாள் கோயில் முதலியவற்றிலிருந்து எழுந்தருளிய ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆதரிப்பது போலே, எவருமறியாத ஒரு குப்பத்திலிருந்து எழுந்தருளிய ஸ்ரீவைஷ்ணவரையும், அவர் இருந்த இடமே ஒரு திவ்யதேசமென்று நினைத்து ஆதரிக்காமல் இருப்பது அபசாரமாகும்.

கருடன், சாண்டிலி என்னும் ஓர் அம்மையாரை இவள் திவய தேஸத்தில் இல்லாமல் குக்கிராமத்தில் இருக்கிறாளே என்று நினைக்க அதனால் அவருடைய சிறகுகள் உதிர்ந்து பின்பு சாண்டிலீ இரண்டு கைகளாலும் தடவிக் கொடுத்தபின் வளர்ந்த வ்ருத்தாந்தம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

8. **பந்து நிரூபணம் :** தன்னுடைய தேஹ பந்துக்களில் ஒருவராக ஒரு ஸ்ரீவைஷ்ணவர் இருந்தால் அவருடைய வைஷ்ணவத்தை யிட்டு ஸ்வாமியாக நினைக்காமல் அவரை பெறும் உறவினராக நினைத்திருக்கை அபசாரம்.

9. **ப்ரகாஸ நிரூபணம் :** தன் ஆசார்யர்களையும், எழுபத்து நான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளின் சேர்ந்த ஆசார்யர்களையும், உலகறிந்த ஆசார்ய கைங்கர்யம், ஸ்ரீ வைஷ்ணவ கைங்கர்யம் முதலியவற்றைச் செய்பவர்களையும், எம்பெருமானையே உபாயோபேயங்களாகக் கொண்டு ஏதோ ஒரு மூலையில் எவரும் அறியாமல் வாழ்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களையும் ஒருப்படிப்பட்ட ரக்ஷகர்கள் என்று எண்ணாமல் இருப்பது அபசாரமாகும்.

10. **ப்ரகார நிருபணம் :** நந்தவனத்தை வளர்க்கும் ஸ்ரீவைஷ்ணவரையும், கோயில் திருப்பணி செய்யும் ப்ரபந்நரையும் இதுபோல் கைங்கர்யங்கள் செய்யும் ஸ்ரீவைஷ்ணவரையும், மேல் பார்வைக்கு ஒன்றும் செய்யாது வெறுமனே இருக்கும் ப்ரபந்நரையும் ஏற்ற தாழ்வு பாராமல் ஒரே விதத்தில் உத்தேஸ்யர்கள் என்று நினையாதிருத்தல் அபசாரமாகும்.

11. **வர்த்தன நிருபணம் :** ஸ்ரீவைஷ்ணவர்கள் தேஹ யாத்ரைக்காக வ்யவஸாயம் செய்தல், ஆயுதம் பிடித்து ராஜசேவை செய்தல் முதலான வ்ருத்தியில் ஈடுபட்டிருந்தாலும் அதையிட்டு மற்ற ஸம்ஸாரிகளைப்போல் இன்ன தொழில் செய்கிறார்கள் என்று கூறுவது அபசாரமாகும்.

12. **தோஷ நிருபணம் :** ஸ்ரீவைஷ்ணவர்கள் தகாத போகாநுபவங்களைச் செய்தாலும் "பாரதக் கதை புண்யமான கதை, பஞ்ச பாண்டவர்களின் பத்னியான த்ரௌபதீ பதிவ்ரதை அவளை பத்னியாக அடைந்த பஞ்ச பாண்டவர்கள் பாக்யசாலிகள் ஏனெனில் இவர்களில் புருஷோத்தமன் திருவுள்ளம் உகந்திருக்கிறான்" என்றபடி நினையாமல் அவர்களை முக்கரணங்களிலும் குறைந்த அறிவுடையவர்கள் என்றும் அநுஷ்டாநம் இல்லாதவர்கள் என்றும் இகழ்வது அபசாரமாகும்.

இவ்வாறான பன்னிரெண்டு வகை பாகவத அபசாரங்களும் ஸ்வரூப நாஸத்தை ஏற்படுத்தக் கூடியவைகளாகும். இனி இவற்றை நிவ்ருத்தி செய்யும் உபாயங்களைக் கூறுகிறேன் கேளுங்கள்.

<u>பாகவத அபசார நிவ்ருத்தி உபாயங்கள் பன்னிரெண்டு வகைப்படும் அவை:-</u>

1. **ஆஹார நியமம் :** பாகவதர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் அன்னத்தையே ப்ரஸாதப்படுகை.

2. **விஹார நியமம் :** பகவத் ஸன்னிதிகளிலும், திருநந்தவனங்களிலும், தன்னுடைய ஆசார்யன் விரும்பி ஸஞ்சரிக்கும் இடங்களிலும் ஸஞ்சரித்துக் கொண்டு, மற்ற இடங்களில் ஸஞ்சரிக்காமல் இருக்கை.

3. **அர்த்த நியமம் :** ப்ராக்ருதர்களான அவைஷ்ணவர்களிடத்தில் அடிமைத்தொழில் செய்து ஸம்பாதிக்காமல் வைஷ்ணவர்களிடத்திலும் அவர்களின் திருவாராதனத்திற்கு பயன்படும் அமுதப்படி, சாத்துப்படி மற்ற கைங்கர்யங்கள் முதலானவற்றுக்காக அவர்களிடமிருக்கும் த்ரவ்யத்தையும் நிர்பந்தித்துப் பெறாமல்,

தன்னுடைய நிலத்தில் வ்யவஸாயம் முதலியவற்றைச் செய்வதோ, உடல் உழைப்பினாலோ, ஸ்ரீவைஷ்ணவர்கள் அன்புடன் அளித்த தனத்தினாலோ, மதுகரமாகிற வண்டு புஷ்பங்களிலிருந்து அவற்றுக்கு வாட்டம் நேராதபடி தேனை சேகரிப்பது போல் உஞ்சவ்ருத்தி செய்வதாகிற மாதுகரத்தின் மூலம் கிடைக்கும் சில பிடி அரிசிகளாலோ, அன்னத்தை ஸித்தப்படுத்தி அதை எம்பெருமானுக்கு கண்டருளப்பண்ணி ஸ்வீகரிக்க வேணும்.

4. **போஜன நியமம் :** முன் கூறியபடி ஸம்பாதித்த அரிசி முதலானவற்றை அன்னமாக்கி எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் ஸமர்ப்பித்து தான் ப்ரஸாதத்தை உண்ணும்போது இது பகவத் பாகவத ப்ரஸாதமாகையாலே, கைக்கொள்ளத் தக்கது என்றும் தேஹத்தின் உபாதியான பசியை போக்கிக் கொள்ளும் அளவுக்கே எடுத்துக் கொள்ளப்படுகிறது என்றும் எம்பெருமான் கொடுத்த தேஹத்தை தரிக்கச் செய்யுமளவிற்கே எடுத்துக் கொள்ளப்படுகிறது என்றும் நினைத்து போஜனத்தை புருஷார்த்தம் என்று கொள்கை.

5. **ஸ்நாந நியமம் :** புண்ய தீர்த்தம் முதலியவைகளில் ஸ்நானம் செய்வது பாபத்தை போக்கும் என்று நினைத்தோ விரும்பிய பயன்களைத் தரும் என்று நினைத்தோ 'புண் போன்ற இந்த ஸரீரத்தை பரிஸித்தப்படுத்தும்' என்று நினைத்தோ 'மோக்ஷத்தை அடைவதற்கு இது தகுதியை ஏற்படுத்தும்' என்று நினைத்தோ தீர்த்த ஸ்நாநங்கள் செய்யாமல் எம்பெருமானுக்கும் அவன் அடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஆராதனத்துக்குறுப்பாக ஸ்நாநம் செய்தல்.

6. **ஸ்வரூப நியமம் :** மற்ற தெய்வங்களுக்கோ மனிதர்களுக்கோ அடிமைப்பட்டிராமல் எம்பெருமானுக்கும் அவன் அடியார்களுக்கும் மட்டுமே அடிமைப்பட்டிருத்தல்.

7. **உபாய நியமம் :** எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருத்தல்.

8. **வாஸ நியமம் :** எம்பெருமானையே உபாயமாகவும், உபேயமாகவும் கொண்ட பரம பாகவதோத்தமர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகையின் வாசல் திண்ணையிலேயே இருந்து வாழ்க்கை.

9. **போக நியமம் :** பரம பாகவதோத்தமர்களின் ஸேவையே காட்சியும், கைங்கர்யமே எல்லா போகங்களும் ஆகும் என்று நினைத்திருக்கை.

10. ஆசார நியமம் : பணத்தாசை, அபிமானங்கள் முதலியவற்றின் காரணமாக சில காரியங்கள் செய்து அதனால் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளத்திலும், ஆசார்யன் திருவுள்ளத்திலும் கலக்கம் ஏற்படாத வண்ணம் வாழ்க்கை வாழ்தல்.

11. ஸம்ஸர்க நியமம் : ஸாத்விகர்களான ஸ்ரீமந்நாராயணனின் அடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் உகந்த இடங்களிலேயே வாஸம் செய்தல் என்று அருளினார்.

மேற்கூறிய பன்னிரெண்டு வகையான நியமங்கள் ஏற்பட்டால் முற்கூறிய பன்னிரெண்டு வகையான பாகவத அபசாரங்கள் ஏற்படாமல் நம்மை ரக்ஷித்துக் கொள்ளலாம் என்றும் அருளிச் செய்தார்.

சிஷ்யர்களும், திருவரங்கத்தமுதனார் அருளிய

"காரேய் கருணை இராமானுச!
இக்கடலிடத்தில் ஆரே
அறிபவர் நின்னருளின் தன்மை – அல்லலுக்கு
நேரே உறைவிடம் நான் வந்து நீ யென்னை யுயத்தபின் உன்
சீரேயுயிர்க்குயிராய் அடியேற்கின்று தித்திக்குமே"

என்ற பாசுரத்தை அனுஸந்தித்தவாறு எம்பெருமானாரின் திருவடிகளை போற்றிப் பணிந்துய்ந்தனர்.

உடையவர் திருவடிகளே சரணம்.

உடையவர் (கி.பி.1017–1137) 120 ஆண்டுகள் இம்மண்ணுலகில் வாழ்ந்தார். உலகை உய்விக்கத் தோன்றிய காரேய் கருணை இராமாநுஜரும் அவரது சித்தாந்தமும் அடியார்களும் நீடூழி வாழவேண்டும். ஈஸ்வர பக்தியும் ஆச்சாரிய பக்தியும் நானிலமெங்கும் பெருக வேண்டும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## ஆச்சார்ய பரம்பரை

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் தான் முதல் ஆச்சார்யன். பிறகு பிராட்டி, விஷ்வக்சேனர், நம்மாழ்வார், நாதமுனிகள் என ஆச்சார்ய பரம்பரை தொடர்ந்து வருகிறது.

## நாதமுனிகள்:—

ஆச்சார்யர்களில் முதல்வரான நாதமுனிகள் வீரநாராயணபுரத்தில் ஈஸ்வரபட்டர் என்பவருக்கு திருமகனாக சேனை முதலியாரின் முக்கியமான படைத் தலைவரான கஜாநநர் என்னும் நித்ய சூரியின் அம்சமாக அவதரித்தார்.

| | | |
|---|---|---|
| ஆண்டு | – | சோபக்ருது, கலியுகம் 3224 வருஷத்துக்கு மேல் 330 ஆண்டுகள் வாழ்ந்தார். |
| மாதம் | – | ஆனி |
| நட்சத்திரம் | – | அனுஷம் |
| இயற்பெயர் | – | ஸ்ரீ ரங்கநாதன் |
| குலம் | – | சொட்டை குலம் |
| கோத்ரம் | – | சடமர்ஷண கோத்ரம் |

## நாலாயிர திவ்யப் பிரபந்தம் பற்றி அறிதல் :—

மேல்கோட்டை திருநாராயணபுரத்தை சேர்ந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் வீரநாராயணபுரத்திற்கு வந்து மன்னனாரை சேவித்து திருவாய்மொழியில் 5ம் பத்தில் 8ம் திருவாய்மொழியாகிய ஆராவமுதே என்ற பதிகத்தை பாடித் துதித்தனர் அதன் இறுதியில் குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் பத்தும் என்பதனை கேட்ட ஸ்ரீமந் நாதமுனிகள் அந்த வைணவர்களிடம் இந்த ஆயிரம் பாசுரமும் தங்களுக்கு தெரியுமா என வினவ அவர்கள் இந்த பத்து பாசுரம் மட்டும் தான் தெரியும் எனக் கூறினர்.

ஸ்ரீமந் நாதமுனிகள் திருக்குடந்தைக்குச் சென்று ஆராவமுதப்பெருமாளை பற்றி பாடிய பாசுரத்தினால் அங்கு திவ்யப் பிரபந்தத்தை பற்றி அறிய முயற்சிக்க அங்கும் கிடைக்காமையால் திருக்குருகூர் சென்று அங்கு எம்பெருமாளிடம் வணங்கி நிற்கையில் மதுரகவியாழ்வாரின் சீடர் ரம்பரையில் வந்த ஸ்ரீபராங்குசதாசர் என்பவர் எங்களுக்கு கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பிரபந்தம் தெரியும் இதனை நம்மாழ்வார் முன்பு பன்னீராயிரம் முறை சொல்ல ஆழ்வார் கண்ணுக்கு இலக்காவார் என்று கேட்டிருந்ததுண்டு என்று கூறினார். கண்ணிறுண் சிறுத்தாம்பு என்ற பிரபந்தத்தை உபதேசிக்கப்பெற்று திருப்புளியாழ்வாரின் அடியில் அமர்ந்து பன்னீராயிரம் முறை உருச் செய்தவுடன் நம்மாழ்வார் யோக நிலையில் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு காட்சியளித்து

திருவாய்மொழி மட்டுமல்லாமல், தான் இயற்றிய மற்ற பிரபந்தங்களையும், மற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்த பிரபந்தங்களையும் தானே உபதேசித்தருளினார். திருமந்திரம், த்வயம் சர்மஸ்லோகம் (ரகஸ்யத்ரையம்) ஆகியவற்றின் உட்பொருளையும் உபதேசித்து எம்பெருமானாரின் பவிஷ்யாச்சார்ய விக்ரகத்தையும் அளித்து மறைந்தார். வீரநாராயணபுரத்து பெருமாள் மன்னனாரின் ஆஞ்ஞைபடி இந்த நாலாயிர திவ்யப் பிரபந்தத்தையும் ஸ்ரீமந் நாதமுனிகள் இயலும், இசையுமாக்கி தனது மருமக்கள் மேலையகத்தாழ்வார், கீழையகத்தாழ்வார் முதலானோர் மூலமாக நடடெங்கும் பரப்பினார். ஆழ்வார்களுக்கு பிறகு ஸ்ரீமந் நாதமுனிகளாலே நாலாயிர திவ்யப் பிரபந்தம் உலகமெங்கும் பரவியது.

ஸ்ரீமந் நாதமுனிகளின் சீடர்கள்:-

1. உய்யக் கொண்டார்
2. குருகைக் காவலப்பன்
3. நம்பி கருணாகரதாஸர்
4. ஏறுதிருவுடையார்
5. திருக்கண்ணமங்கை யாண்டான்
6. வானமாமலை தேவியாண்டான்
7. உருப்பட்டூர் ஆச்சான் பிள்ளை
8. சோகத்தூராழ்வான்.

ஸ்ரீமந் நாதமுனிகள் தாது வருடம், சுக்லபட்ச, ஏகாதசியன்று மாசி மாதம் கி.பி. 917 ல் தங்கள் க்ருஹத்திற்கு ராமர், லஷ்மணர், சீதை, மாருதியும் வேடர், வேடுவச்சியாக வந்ததையறிந்து அவர்களை தொடர்ந்து கங்கை கொண்ட சோழபுரத்தில் கீழைவாசல் வரையில் எழுந்தருளி, அந்த வேடர், வேடுவச்சி காணக்காண மறைந்தவாறே இவரும் அந்த இடத்திலேயே மூர்ச்சித்து திருநாட்டுக்கெழுந்தருளினார்.

உய்யக் கொண்டார்:-

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | - | புண்டரீகாக்ஷர் |
| பிறந்த இடம் | - | திருவெள்ளரை |
| ஆண்டு | - | கலியுகம் 3027க்கு மேல், பிரபவ வருடம் |
| மாதம் | - | சித்திரை |
| நட்சத்திரம் | - | கார்த்திகை |
| வாழ்ந்த ஆண்டு | - | 105 ஆண்டுகள் |

| | | |
|---|---|---|
| அம்சம் | – | ஜயத்ஸேநர் என்ற நித்யஸூரியின் அம்சம் |
| குலம் | – | அந்தணர் குலம் |
| வேறு பெயர்கள் | – | பத்மாக்ஷர், ராஜவாக்ஷர், அரவிந்தாக்ஷர். |

நாதமுனிகளிடம் "பிணங்கிடக்க மணம் புரிவாருண்டோ?" அடியேன் ஒருவன் எப்படியானாலும் பரவாயில்லை. யோகம் வேண்டாம். உலகுய்ய திவ்ய ப்ரபந்தத்தை உபதேசிப்பீர் என்று ப்ரத்தித்தார். அதனால் சந்தோஷமடைந்த நாதமுனிகள் அவரை என்னை உய்யக்கொண்டிரே என்று கூற அன்றிலிருந்து இவர் உய்யக்கொண்டார் என்னும் பெயரில் அமைக்கப்பட்டார். நாதமுனிகள் இவருக்கு நம்மாழ்வார் தமக்கு அருளிய ஸ்ரீராமனுஜருடைய விக்ரஹத்தை கொடுத்து இதை என்னுடைய பெயரனுக்கு நான் விரும்பின விஷயம் என்று காட்டிக் கொடும் என்று நியமித்தார்.

**சிஷ்யர்கள்:–**

1. மணக்கால் நம்பி
2. திருவல்லிக்கேணி பாண்பெருமாளரையர்
3. சேட்டலூர் செண்டலங்காரர்
4. புண்டரீகதாஸர்
5. உலகப்பெருமாள் நங்கை

**மணக்கால் நம்பி –உய்யக்கொண்டாருடைய பிரதான சிஷ்யர்:–**

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | – | ஸ்ரீ ராம மிச்ரர் |
| ஆண்டு | – | கி.பி 929 விரோதி வருடம் |
| மாதம் | – | மாசி |
| நட்சத்திரம் | – | மகம் |
| பிறந்த ஊர் | – | மணக்கால் |
| குலம் | – | அந்தணர் குலம் |
| அம்சம் | – | குமுதாக்ஷர் என்ற நித்யஸூரியின் அம்சம் |

**மணக்கால் நம்பி பெயர் காரணம்:-**

உய்யக்கொண்டார் திருவடிகளில் பன்னிரெண்டு ஆண்டுகள் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கும் பொழுது உய்யக் கொண்டாருடைய தேவி ஆண்டாள் திருநாட்டுக்கு எழுந்தருள அவருடைய திருமாளிகைக் கைங்கர்யங்களை மேற்கொண்டு வருகையில் அவருடைய இரு பெண் பிள்ளைகளை நீராட்டி அழைத்துக் கொண்டு வருகையிலே வாய்க்கால் சேறாயிருக்கக்கண்டு அவர்கள் திகைத்து நிற்க, ஸ்ரீராமமிச்ரர் தாம் படியாகக்கிடந்து அவர்களுடைய மணற்கால்கள் தம் திருமேனியில் படியும்படி அவர்களை முதுகிலே அடியிட்டெழுந்தருளிவித்துக் கொண்டு போக உய்யக்கொண்டாரும் இச்செய்தி கேட்டு அவரை கொண்டாடினார். மணக்கால்நம்பி என்ற பெயர் இதன் காரணமாகவும் ஏற்பட்டது.

**மணக்கால் நம்பியின் செயல்கள்:-**

உய்யக் கொண்டார் திருநாட்டுக் கலங்கரிக்கும் போது மணக்கால் நம்பியை வைணவ தர்சன நிர்வாகராய் இருக்கும்படி நியமித்தார். நாதமுனிகள் கடைசி காலத்தில் கூறிய கட்டளைகளை எல்லாம் நிறைவேற்றும் படி அருளிச் செய்தார். இந்த நிய மனத்தின்படி ஈஸ்வர முனியின் குமாரான யமுனைத்துறைவனை திருத்திப் பணிக்கொண்டு அவருக்கு ரஹஸ்யத்தையும், திவ்ய ப்ரபந்தங்களையும், அவற்றின் பொருளையும், ஸ்ரீராமனுஜருடைய விக்ரஹத்தையும் அருளினார்.

**மணக்கால் நம்பியின் சிஷ்யர்கள்:-**

1. ஆளவந்தார்
2. திருவரங்கப்பெருமாள் அரையர்
3. தெய்வத்துககரசு நம்பி
4. பிள்ளையரசு நம்பி
5. சிறுபுள்ளூருடையார் பிள்ளை
6. திருமாலிருஞ்சோலைதாஸர்
7. வங்கி புரத்தாச்சி
8. கோமடத்துத் திருவிண்ணகரப்பன்.

**ஆளவந்தார்:– (நாதமுனிகளின் பெயரன்)**

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | – | யமுனைத்துறைவர் |
| வருடம் | – | தாது |
| மாதம் | – | ஆடி |
| நட்சத்திரம் | – | உத்தராடம் |
| பெற்றோர் பெயர் | – | ஈஸ்வர முனி, ஸ்ரீரங்க நாயகி |
| பிறந்த ஊர் | – | வீரநாராயணபுரம் |

**கல்வி கற்றல்:–**

யமுனைதுறைவர் மாளாபாஷ்ய பட்டர் என்ற லத்வானிடம் சாஸ்திரங்களை பயின்று தேர்ந்தார்.

**யமுனைதுறைவரும் ஆக்கியாழ்வானும்:–**

ஆக்கியாழ்வான் என்ற ராஜகுரு கல்வி செருக்குற்று அந்த தேசத்தில் உள்ள வித்வான்களை எல்லாம் அவருககு கப்பம் கட்ட வேண்டும் என்று கேட்டு கப்பம் வாங்கி வந்தார். ஒரு நாள் மஹாபாஷ்ய பட்டருக்கு ஒரு ஓலை அனுப்பினான். அதை பார்த்து அவர் மிகவும் கலங்கியருந்ததை கண்டு யமுனைதுறைவர் அந்த ஓலையை கிழித்து எறிந்து விட்டர். பின்னர் ராஜசபைக்கு வரும்படி ஒரு ஓலை அனுப்பினார். அதையும் கிழித்து எறிந்து விட்டார். ஒரு ஸ்லோகத்தை எழுதி அனுப்பினார்.

அந்த ஸ்லோகத்தை வாசித்த ஆக்கியாழ்வான் இப்படியும் ஒரு வித்வான் உண்டோ என்று வியந்து அரசனுக்கு தெரிவித்தார். உடனே அரசன் பல்லக்கினை அனுப்பி யமுனைதுறைவரை உரிய மரியாதையுடன் அழைத்து வரச்சொன்னார். யமுனைத்துறைவரும், ஆக்கியாழ்வானும் வாதத்தில் உட்கார்ந்தவுடன் ராஜாவும், ராணியும் ஒரு சபதம் மேற்கொண்டனர். ஆக்கியாழ்வான் தோற்றால் அரசன் யமுனைதுறைவருக்கும் பாதி ராஜ்யம் தருவதாகவும், யமுனைத்துறைவர் தோற்றால் அரசி அரசனுக்கு வேலைக்காரியாவேன் என்றும் சபதம் செய்து கொண்டனர்.

**யமுனைதுறைவர் ஆக்கியாழ்வான் வாதப்போர்:–**

1. ஆக்கியாழ்வான் யமுனைத்துறைவரை பார்த்து நான் லௌகிய விஷயங்களில் நீர் இல்லை என்று சொல்வதை நான் உண்டு என்று சொல்வேன். நீர் உண்டு என்று சொல்வதை

நான் இல்லை என்பேன். வென்றவன் தோற்றவன் தலையிலே அடிக்க வேண்டியது என கூறினார். அதற்கு இசைந்த யமுனைத்துறைவர்.

1. உன் தாய் மலடியல்ல
2. ராஜா தார்மிகன்
3. ராஜபத்தினி கற்புடையவள்

என்று மூன்று வார்த்தைகளை கூறி ஆக்கியாழ்வானை மறுக்கச் சொன்னார் ஆக்கியாழ்வான் இந்த மூன்று வார்த்தைகளையும் மறுக்க இயலாமல் மௌனியாக இருந்தார்.

2. ஆக்கியாழ்வானுக்கும், யமுனைதுறைவருக்கும் சாஸ்திரங்கள் மீதான வாக்குவாதம் நடைபெற்றது. அதிலும் ஆக்கியாழ்வான் தோல்வியை தழுவினார்.

பின்னர் அரசனும், அரசியும் யமுனைத்துறைவரை உம்மால் அந்த மூன்று வாக்கியங்களையும் மறுக்க முடியுமா ? என கேட்டனர். உடனே யமுனைத்துறைவர் பின்வருமாறு மறுத்துக் காட்டினார்.

**1. <u>உன் தாய் மலடியல்ல:-</u>**

ஒரு மரம் தோப்பாகாது, ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல என்ற உலக வழக்கின்படி, இவ்வுலகில் ஒரு பிள்ளையை பெற்ற தாய் இப்பிள்ளை தனக்கு தக்க வேண்டுமே, நம்மை ரக்ஷிக்க வேண்டுமே என்று கவலைப்பட்டுக் கொண்டே இருப்பாளாகையால் அவள் பிள்ளை பெற்றும் மலடியாவாள். ஆதலால் ஆக்கியாழ்வானை பெற்ற தாய் மலடியாவாள்.

**2. <u>ராஜா தார்மீகன்:-</u>**

குடிகள் செய்யும் பாபங்கள் அரசனை சேருமாகையாலே தர்மசிந்தனை உருவெடுத்த அரசனும், குடிகள் செய்யும் பாவத்திலே பங்கு கொள்வதானல், அரசன் தர்மிஷ்டன் அல்ல என்று மறுக்கப்படுகிறது.

**3. <u>ராணி பதிவ்ரதை:-</u>**

வேத சாஸ்திரத்தின்படி பெண் தன் கணவனை அடையும் முன்னரே மந்திர வகையால் தேவதைகளாலே தீண்டப்படுகிறாள் என்ற வாக்கியத்தின்படி முதல் நாள் ஸோமன் உன்னை

மணப்பான், இரண்டாம் நாள் கந்தர்வன் உன்னை மணப்பான் மூன்றாம் நாள் அக்னி உன்னை மணப்பான். நான்காவது நாள் மனிதன் உனக்கு கணவனாகிறான் என்ற வேத வாக்கியத்தின்படி, எல்லா ஸ்திரிகளுக்குமே மணமான மூன்று நாட்கள் தேவதைகளுடன் தொடர்பு உள்ளதால் பதிவ்ரதத்தில் குறையுண்டு. ஆகையாலே ராஜ பத்தினி பதிவிரதை என்ற வாக்கியம் மறுக்கப்படுகிறது.

<u>யமுனைதுறைவர் ஆளவந்தார் ஆதல்:–</u>

ஆக்கியாழ்வானை தோற்கடித்த பிறகு, செய்து கொண்ட சபதத்தின்படி ஆக்கியாழ்வானை வயதில் முதிர்ந்தவரை தலையில் அடிப்பதற்கு மறுத்து விட்டார் யமுனைத்துறைவர். இவரது புலமையையும், பண்பையும், லோகானுபவத்தையும் கண்டு வியப்புற்று வித்வான்கள் இவருக்கு ப்ரஹம ரதம் பண்ணிப் பெருமைப்படுத்தினர். ராஜமஹிஷியும் என்னை ஆளவந்திரோ என்று தன் பிள்ளைப்போல் வாரி அணைத்து ராஜாவுடன் அரண்மனைக்குள் அடைந்தாள் ராஜாவும் தனது பிரதிஜ்ஞையின்படி இவருக்கு பாதி ராஜ்யத்தை கொடுத்தார். ஆளவந்தாரும் தன் பத்தினியுடன் அரசாட்சி செலுத்தி வந்தார்.

<u>மணக்கால் நம்பி ஆளவந்தாரை தடுத்தாட்கொள்ளுதல்:–</u>

நாதமுனியின் பெயரரான யமுனை துறைவன், ஆக்கியாழ்வான் என்ற ராஜகுருவை தர்க்க சாஸ்திரத்தில் வென்று அந்த அரசனால் பாதி ராஜ்யம் கொடுக்கப்பட்டு அதை ஆண்டு வந்தார். அந்த அரசியார் என்னை ஆளவந்தீரே என்று ஆனந்தத்துடன் அவரை பெருமைபடுத்தியதால் ஆளவந்தார் என்ற பெயர் ஏற்பட்டது. உய்யக்கொண்டாரின் நியமனப்படி மணக்கால் நம்பி ஆளவந்தாரை சந்தித்து வைணவ தலைமைப் பீடத்தை ஏற்று நடத்திட கேட்டுக் கொள்ள வேண்டுமென முயற்சித்தும், அவரை காண முடியவில்லை. அவருக்கு தினம் அரண்மனையின் அமுது தயாரிப்பவரிடம் தூதுவளை கீரையை 6 மாத காலம் அளித்து வந்தார். அப்போதும் ஆளவந்தார் இவரை பற்றி அறியவில்லை. ஆதனால் மனம் வருந்தி நான்கு நாட்கள் தூதுவளை கீரையை கொடுப்பதை தவிர்த்தார். ஆளவந்தார் அமுது செய்யும் போது ஏன் தூதுவளைகீரை இல்லாமல் இருப்பதேன் என கேட்க ஒரு வயதான அந்தணர் அளித்துவந்தார், நான்கு நாட்களாக வரவில்லை என்று கூறினார். அதற்கு, ஆளவந்தார் அவர் வந்தால் என்னிடம் அழைத்து வாருங்கள் என்று கூறினார். மறு நாள், மணக்கால் நம்பி தூதுவளை கீரையை திருமடைப்பள்ளியில் கொடுத்தார். அவர்களும், மணக்கால் நம்பியை ஆளவந்தாரிடம் அழைத்து சென்றனர். ஆளவந்தார் மணக்கால் நம்பிக்கு என்ன வேண்டும் என்று கேட்க நமக்கு இவையொன்றும் வேண்டா, உமது பாட்டனார் தேடி வைத்த நிதி ஒன்று என்னிடம் உள்ளது. அதை உம்மிடம் அளிப்பதற்கு நான் இங்கு வந்து போவதை தடை செய்யாமல் இருக்க

உத்தரவிட வேண்டும் என்று கேட்க அதன்படியே அரண்மனை சேவகர்களிடம் உத்தரவிட்டார். அன்று முதல் தினந்தோறும் அரண்மனைக்கு சென்று ஆளவந்தாருக்கு கீதையின் செம்மைப்பொருளை எடுத்துரைத்திட அதை கேட்க கேட்க ஆளவந்தாரும் ஆழங்கால்பட்டு இந்த எம்பெருமானை அடையும் உபாயம் என்ன என்று கேட்க நம்பியும் கீதையின் 18வது அத்தியாயத்திலுள்ள சரமச்லோகத்தின் பொருளை ஆளவந்தாருக்கு அருளிச்செய்து அவனை அடைவதற்கு அவனே உபாயம் என்ற உறுதியை அவருக்கு உண்டாக்கினார். அதன் பின் ஸ்ரீரங்கம் அழைத்துச் சென்று பெரிய பெருமாளைத் திருவடி தொழச் செய்து உங்களுடைய பாட்டனார் தேடி வைத்த பெருநிதி இதுவே காணும் என்று காட்டிக் கொடுக்க ஆளவந்தார் ராஜ்யத்தை துறந்து துறவறம் பூண்டு ஸ்ரீரங்கத்தில் வைணவத் தலைமை பீடத்தை ஏற்றார்.

குருகைக் காவலப்பன்:-

இவர் நாதமுனிகளிடமிருந்து பத்தியோகத்தைக் கற்றார். அஷ்டாங்க யோக முறைகளை அவருக்கு ஸ்ரீமந்நாதமுனிகள் அருளினார். குருகை காவலப்பனிடம் ஸ்ரீமந்நாதமுனிகள் தனது திருக்குமாரன் ஈஸ்வரமுனிக்கு ஒரு மகன் பிறப்பான். அவனுக்கு இந்த யோகத்தை கற்று தர வேண்டும் என கூறினார். ஈஸ்வர முனிக்கு யமுனைத்துறைவன் என்று ஒரு திருக்குமாரன் தபிறந்தான். அவரே ஆளவந்தார் என அழைக்கப்பட்டார். மணக்கால் நம்பி ஆளவந்தாரிடம் உம்முடைய பட்டனாரான நாதமுனிகள் அஷ்டாங்கயோக இரகசியத்தை குருக்கைகாவலப்பனிடம் சேமித்து வைத்திருக்கிறார். அவரிடம் சென்று அந்நிதியை பெற்றுக் கொள்ளும் என்று நியமித்து அருளினார். ஆளவந்தாரும் குருக்கைகாவலப்பனிடம் சென்று யோகரகசியம் உபதேசிக்க வேண்ட, அவரும் தாம் இவ்வுலகை விட்டு நீங்கும் நாளை குறிப்பிட்டு அதற்கு முன் வந்தால் உபதேசிக்கிறோம் என்று திருமுகம் எழுதிக் கொடுத்து ஆளவந்தாரை திருவரங்கத்திற்கே அனுப்பினார். ஆளவந்தார் திருவனந்தபுரத்திற்கு எழுந்தருளி அனந்த பத்மநாபனை திருவடி தொழுது குருகை காவலப்பன் எழுதிக் கொடுத்த திருமுகம் நினைவுக்கு வர அன்றைய தினம், அப்பன் திரு நாட்டுக்கலங்கரிக்க இருக்கும் நாள் என்பதனை கண்டு ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே என்று மிக வருந்தி ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளினார். அன்றிலிருந்து விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு யோக ரகஸ்யம் விடுபட்டு போயிற்று

## ஆளவந்தார் அருளிச் செய்த நூல்கள்:—

1. ஆத்ம ஸித்தி
2. ஸம்வித் ஸித்தி
3. ஈஸ்வர ஸித்தி
4. கீதார்த்த சங்க்ரஹம்
5. ஆகம ப்ரமாண்யம்
6. மஹா புருஷ நிர்ணயம்
7. ஸ்தோத்ர ரத்னம்
8. சதுச்ஸ்லோகி

## ஆளவந்தாரின் சிஷ்யர்கள்:—

1. பெரிய நம்பி
2. திருக்கோட்டியூர் நம்பி
3. பெரிய திருமலை நம்பி
4. மாறனேரி நம்பி
5. திருக்கச்சி நம்பி
6. திருவரங்கப் பெருமாளரையர்
7. திருமலை யாண்டான்
8. வானமாமலை யாண்டான்
9. தெய்வாரியாண்டான்
10. ஈசானாண்டான்
11. சீயாராண்டான்
12. திருக்குருகூரப்பன்
13. திருமோகூர்தாஸர்
14. திருமோகூர் நின்றான்
15. தெய்வப் பெருமாள்

16. வகுளாபரணஸோ மாஜியார்

17. திருக்குருகூர் தாஸர்

18. திருமாலிருஞ்சோலை தாஸர்

19. வடமதுரைப் பிறந்தான்

20. ஆட்கொண்டியம்மங்கி

ஆளவந்தார் மாறனேரி நம்பியை அனுக்ரஹித்தல்:-

ஆளவந்தாருக்கு முதுகில் ராஜபிளவை என்னும் நோய் உண்டாயிற்று. ஒரு நாள் காலகக்ஷேப கோஷ்டியில் தன் சிஷ்யர்களிடையே இந்த நோயை ஏற்றுக் கொள்வார் எவரேனும் உளரோ என ஆளவந்தார் கேட்க, மாறனேரி நம்பிகள் தான் அந்த நோயை அடியேனுக்கு தந்தருள வேண்டுமென்று மிகவும் வினயத்துடன் பிரார்த்தித்தார். ஆச்சார்யரிடம் கொண்ட பக்தியின் காரணமாக அந்த நோயை ஆச்சார்ய ப்ரசாதமாக ஏற்றுக் கொண்டார்.

மாறனேரி நம்பிகள் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர். விவசாயம் செய்து வாழ்ந்து வந்தார் ஒரு முறை அவருடைய நிலத்தை அவர் உழுது கொண்டிருந்த பொழுது ஆளவந்தார் அவ்வழியே சென்று கொண்டிருந்தார். அப்போது மாறனேரி நம்பிகள் சேற்றை குழைத்து குவளையில் இட்டு குடித்துக் கொண்டிருந்தார். ஆளவந்தார் இதை கண்டு ஏன் இவ்வாறு செய்கிறாய்கள் என வினவ, கஞ்சிக்கு காத்திருந்தும் வரவில்லை. இந்த மண் சுவருக்கு (உடம்புக்கு) மண்ணிட்டேன் என்று பதில் கூறினார். ஆளவந்தார் மாறனேரி நம்பிகளின் வைராக்கியத்தை வியந்து அவரை திருத்தித் பணி கொண்டார் அன்றிலிருந்து மாறனேரி நம்பிகள் ஆளவந்தாரை ஆச்சர்யராக கொண்டு அவரிடம் அளவற்ற அன்பும், ஆச்சார்ய பக்தியும் கொண்டு வாழ்ந்து வந்தார்.

ஆளவந்தாரின் குமாரர்கள்:-

ஆளவந்தாருக்கு (1) சொட்டை நம்பி (2) தெய்வத்திற்கு அரசு நம்பி (3) பிள்ளை அரசு நம்பி (4) ரங்கராஜன் (ரு) திருவரங்க நயினாரும் பிறந்தனர் என்று திருமுடி அடைவு என்னும் பழைய கரந்தத்தில் காணப்படுகிறது.

இந்த நால்வரும் சிறந்த ஆசார்யகளாயும், அனுஷ்டாதாக்களாயும் இருந்துள்ளனர்.

ஸ்ரீ ஆளவந்தாரின் இரண்டாவது குமாரரான தெய்வத்துககரசு நம்பி யோகநிஷ்டராக இருந்தார். இவர் தனக்கு ஸம்ஸாரத்தில் ருசி இல்லை என்று கூறினாலும் இவருக்கு ஏற்கனவே திருமணமாகி விட்டதால் பார்யையும் அழைத்துக் கொண்டு வடதிசை எம்பெருமான்களை சேவித்து க்ஷேத்ராடனம் செய்து வந்தார்.

ஒரு சமயம் திருமலையில் இவர் எழுந்தருளி, திருவேங்கடமுடையானுக்கு கைங்கர்யம் செய்துவந்த போது எம்பெருமான் இவர் கனவில் தோன்றி, தானே அவருக்கு குமாராக அவதரிக்கப் போவதாகவும், தனது தேவியர்களான திருமகளும், மண்மகளும் இவருக்கு குமாரிகளாக அவதரிக்க இருக்கிறார்கள் என்று விதித்தார். ஆகவே இவரை க்ருஹஸ்த தர்மத்தை அனுஷ்டிக்குமாறு பணித்தருளினார். இவர் தனது 53வது திருநக்ஷத்ரத்தில் ஸந்யாஸஆச்ரமம் ஸ்வீகரித்து, “கோவிந்த ஜீயர்” என்ற திருநாமத்துடன் எழுந்தருளியிருந்து அநேக காலம் ஆழ்வார்திருநகரில் எழுந்தருளி இருந்தார். பிறகு தொண்டைநாட்டு திவ்யதேசங்களின் திருப்பணிகளை செய்துகொண்டு, திவ்யதேச எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்துவந்தார். கடைசியாக திருப்புல்லாணி திவ்யதேசத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு க்ரந்த கால்க்ஷேபம் செய்துவந்தார்.

இவருக்கு அவதரித்த குமாரருக்கு “ஸ்ரீசைலபூர்ணர்” என்றும் “திருமலைநம்பி” என்றும் ஸந்யாஸ ஆச்ரமத்திற்கு முன்பு, நாமகரணம் செய்தார். திருமலைநம்பி அதிமேதாவி ஏகஸந்தக்ராஹி திருமலைநம்பியும் அவருடைய பிதாவின் ஜ்யேஷ்ட ப்ராதாவின் குமாரரான என்னாச்சானும் இன்னும் அநேகரும் தெய்வத்திற்கு அரசு நம்பியின் ஸன்னதியில் சாஸ்த்ரங்களைப் பயின்றார்கள். பிறகு திருமலைநம்பி ஸ்ரீரங்கம் எழுந்தருளி தன் பாட்டனாரான ஸ்ரீ ஆளவந்தாரிடம் உபயவேதாந்த சாஸ்த்ர காலக்ஷேபம் செய்தார். பிறகு இவரை ஸ்ரீ ஆளவந்தார் திருவேங்கடமுடையான் கைங்கர்யத்திற்காக திருமலைக்கே அனுப்பினார்.

தெய்வத்துக்கரசு நம்பியின் குமாரர் பெரிய திருமலைநம்பியும், குமாரத்திகள் பூமி பிராட்டியாரும் , பெரிய பிராட்டியுமாவர்.

<u>தாதாசார்யர்கள் என்ற பெயர் பெற்றது:—</u>

திருமலைநம்பிகள் ஒரு நாள் வழக்கம்போல் திருமலையில் ஆகாச கங்கையிலிருந்து திருமஞ்சன தீர்த்தக்குடத்தை தலையில் தாங்கிக்கொண்டு காட்டு வழியாக திருவேங்கடமுடையான் ஸந்திக்கு எழுந்தருளிக் கொண்டிருந்தபோது அப்பன் ஒரு வில்லிபாலகனாய் (வேடுவச்சிறுவனாய்) தோன்றி, நம்பிகளின் எதிரே வந்து, வழியை

மறித்துக்கொண்டு, தனக்குத் தண்ணீர் தாகம் மிகுதியாய் உள்ளது. ஒரு கை தண்ணீர் தர வேண்டுமென யாசிக்க, திருமலைநம்பிகள் தான் திருமலையப்பன் திருமஞ்சனத்திற்காக தீர்த்தம் எடுத்துச் செல்வதாகவும், இதை அந்த வேடுவச் சிறுவனிடம் கொடுக்க இயலாது எனக் கூறினார். பின்பு சிறிது தூரம் சென்றதும் பின்புறமாக வந்து, சிரஸ்ஸிலிருந்த குடத்தில் வாய் வைத்து உறிஞ்சினான். திருமலைநம்பி அபசாரம் நேர்ந்ததே என்று மிகவும் மனம் நொந்தார். பிறகு மீதியிருந்த குடத்துத் தீர்த்தத்தை நீயே பருகு என கீழே வைத்தார். வேண்டியமட்டும் தண்ணீரைப் பருகி, அந்த சிறுவன் திருப்தியானது என்றான். திருமலைநம்பிகள் மீண்டும் ஆகாசகங்கைப் போக முயல, அந்தச் சிறுவன் அந்த ஆகாசகங்கையை இருந்தவிடத்திற்கே கொண்டுவருவதாகச் சொல்லி, தன் வில்லினின்று பாணத்தைத் தொடுக்க, ஆகாசகங்கை அங்கேயே தோன்றியது. திருமலைநம்பிகள் வியந்துபோக அந்த வேடுவச்சிறுவன் மறைந்துபோனான். அந்த தீர்த்தம் ஆகாசகங்கையின் தீர்த்தமே என்று உணர்ந்து, இது அப்பனுடைய ஆச்சர்ய சேஷ்டிதம் என்று கொண்டு, அதில் நீராடி மீண்டும் தீர்த்தம் எடுத்து அதிவிரைவாய் ஸந்நிதிக்கு வர, அதற்குள் திருவாராதனம் முடிந்துவிட, அதனால் மூர்ச்சையடைந்தார், மலையப்பனும் அவருக்கு முன்பு தோன்றி "தாத!" எழுந்திரும். நான்தான் வேடுவச்சிறுவன் வடிவில் வந்ததும், ஆகாசகங்கையைப் புதிதாக ஏற்படுத்தியதும். ஆகவே உம்மை, என் நீர்விடாய் தீர்த்ததால் "தாத" என்று அழைத்தேன். "தாத என்றால் அப்பா என்று அர்த்தம். இன்று முதல் உம்மை எல்லோரும் "தாத" என்றே அழைக்கப்படும். "தாத ஆச்சாரியர் என்று அழைக்கப்படுவர்" என்று அநுகரஹித்தார். அன்று முதல் அனைவரும் திருமலைநம்பிகளை "தாத" என்றே அழைக்கத் தலைப்பட்டனர். இந்த ஐதீஹம் ஸ்ரீவேங்கடேச்வர மஹாத்ம்யத்தில் ப்ரஸித்தம்.

திருமலைநம்பிகளின் ஸஹோதரி ஸ்ரீதேவிக்கும், ஸ்ரீபெரும்பூதூர் சோமயாஜிக்கும் திருமலைநம்பி விவாஹம் செய்வித்தார். இத்தம்பதிகளுக்கு எம்பெருமானின் ஆதிசேஷாம்சரான ஸ்ரீமத் ராமாநுஜர் – இளையாழ்வார் அவதரித்தார்.

**திருக்குருகைப்பிரான்பிள்ளான் :–**

திருமலைநம்பிகளின் திருக்குமாரர் திருக்குகைப் பிரான்பிள்ளான். இவர் உபயவேதாந்த ஸிம்மாஸனாதிபதி – இவரே ஸ்ரீமத் ராமாநுஜரின் நியமனப்படி நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு "ஆறாயிரப்படி" என்கிற உரையை அருளிச்செய்தார்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவராலும் அதிகரிக்க வேண்டிய (கற்றுக்கொள்ளவேண்டிய) க்ரந்தசதுஷ்டயத்தில் "பகவத் விஷயம்" என்கிற இவர் அருளிய திருவாய்மொழிக்கான வ்யாக்யானமும் ஒன்றாகும்.

இப்படிப்பட்ட பெருமைகள் மிகுந்த மஹாசார்யர்கள் அவதரித்த வம்சம் தாத வம்சம். இவ்வம்சத்தவர்க்ள காஞ்சிபுரம், திருமலை, ஸ்ரீ ரங்கம், நாவல்பாக்கம், சங்கபுரம், புக்கப்பட்டணம், குருச்சி, அத்தங்கி, நம்பாக்கம், ஸத்யமங்கலம், சூரபுரம், சொர்ணாவூர், இளநகர், கபித்தபுரம் என்கிற விளாங்குப்பம், கும்பகோணம், அருங்குளம், ஸ்ரீவில்லிபுத்தூர், அம்மையப்பன், ஏட்டூர், ப்ரானத்பர்வத பட்டணம், சிகுலி என்கிற பல ஸ்ரீக்ராமங்களில் இருந்து அவ்வவ்வூர் பெயரிலேயே அழைக்கப்பட்டு வருகிறார்கள்.

இந்த வம்சம் ஸ்ரீமந் நாதமுனிகளிடமிருந்து 10 தலைமுறை வரை ஒன்றாகவே இருந்து, பின்பு முன் பத்தியில் கண்டுள்ளபடி பல க்ராமங்களில் சென்று, ஆங்காங்கு அமைக்கப்பட்ட திருக்கோவில்களில் தீர்த்தகாரர்களாக இருந்து, ஸ்ரீமந்நாராயணனுக்கு கைங்கர்பங்கள் செய்துவந்திருக்கின்றனர். குறிப்பாக ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சீபுரம், திருக்குடந்தை, ஸ்ரீவில்லிபுத்தூர் போன்ற திவ்யதேசங்களில் தீர்த்தர்களாக இருந்து வந்துள்ளனர். காலப்போக்கில், தற்காலத்தில் காஞ்சீபுரம் திவ்யதேசத்தில் மட்டுமே தீர்த்தகாரர்களாக இருந்து வருகின்றனர். திருக்குடந்தையில் தாதவம்சத்தினர் பாட்டராசார்யர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.

<u>ஸ்ரீமந்நாராயண யதிந்தர மஹாதேசிகன்:-</u>

2ம் பட்டம் ஸ்ரீமதழகிய சிங்கர் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீமந்நாராயண யதிந்தர மஹாதேசிகன் ஆவணி மாதம் கேட்டை நக்ஷத்திரத்தில் அவதரித்தார். திருமலை நம்பாக்கம் கிருஷ்ணமா சாரியார் ஸ்வாமி என்று பூர்வாச்சரமத் திருநாமம். பஹிதாந்ய வருஷம் சித்திரை மாஸம் (1458 வருடம், ஏப்பல் மீ) சுக்லபஞ்சமி தினம் ஸ்ரீ அஹோபில மடம் ஆஸ்தானத்துக்கு எழுந்தருளினார். ஸ்ரீவண் சடகோப ஸ்ரீமந்நாராயண யதீந்திர மகாதேசிகன் என்று உத்தமாஸ்ரமத் திருநாமம். இந்த அழகியசிங்கர் திருநாராயணபுரத்திலிருந்து ஸ்ரீ அஹோபிலத்துக்கும், அவ்விடத்திலிருந்து ஸ்ரீ ரங்கம் வரையிலும் ஸஞ்சாரம் செய்தருளி, திவ்யதேசத்து எம்பெருமான்களை மங்களாசாஸனம் பண்ணினார்.

ஸ்ரீ அழகியசிங்கர் திருநாராயணன் நியமனப்படி திருநாராயணன் ஸந்நிதியிலும், ஸ்ரீ மதாதிவண் சடகோப யதீந் திர மாகதேசிகன் பிருந்தாவனத்திலும் ஸ்ரீமதாதிவன் சட கோப யதீத்திர மகாதேசிகனின் திவ்ய மங்கள விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்துவைத்தார் என்று குருபரம்பரையில் உள்ளது.

இந்த அநுஷ்டானத்தைப் பின்பற்றியே ஒவ்வொரு திவ்ய தேசத்திலுமுள்ள ஸ்ரீ அஹோபில மடத்தில் ஸ்ரீமாதிவண் சடகோப யதிந்திர மகாதேசிகனின் திவ்யமங்கள விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பெற்று வருகிறது.

ஸ்ரீமதாதி வண் சடகோப யதீந்திர மகாதேசிகன் நியமனப்படி பூர்வாச்ரமத்தில் அறுபது கிரந்தங்களை இந்த ஸ்வாமி அருளிச் செய்துள்ளார். கிரந்தங்களின் பெயர்கூட முழுவதும் கிடைக்கவில்லை திருவாராதனக் கிரமம், தசக வியாக்கியானம், ஸந்தயாவந்தந பாஷ்யம் முதலியன சம்ஸ்கிருதத்தில் அருளிச்செய்துள்ளார். ஸந்த்யாவத்தன பாஷ்யத்துக்குத் தமிழில் சுருக்கமாக அர்த்தம் எழுதி, இஞ்சி மேட்டு ஸ்ரீ அழகியசிங்கர் பிரசுரித்தருளினார்.

புருஷகார மீமாம்ஸை என்று ஒரு கிரந்தம் அருளிச் செய்துள்ளார். அத்தக் கிரந்தத்தைப் பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் என்று இரண்டாகச் செய்தருளினார், சில வித்வான்கள் இந்தக் கிரந்தங்களை வாங்கிச் சென்று ஸித்தாந்த க்ரந்தத்தை மறைத்துவிட்டார்கள். சில காலத்துக்குப் பின் பெரிய வேதாந்த ராமாநுஜ ஸ்வாமி அந்த ஸித்தாந்த க்ரந்தத்தைக் தம் ஆசார்யரிடம் காலக்ஷேப காலத்தில் நன்கு அறித்து கொண்டார். அதை அநுஸரித்து, ஸ்ரீ த்தவஸித்தாஞ்ஜநாதி க்ரந்தங்களைச் செய்தருளினார் என்று குருபரம்பரை மூலமாகத் தெரிகிறது.

இந்த அழகியசிங்கர் மதுர மங்கலம் என்னும் அக்கிர காரத்தைப் பிரதிஷ்டை செய்தருளினர்.

ஸ்ரீ அழகியசிங்கர் திவ்யதேசங்களில் ஸஞ்சாரம் செய்து கொண்டிருந்தபோது திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளும்படி திருநாராயணன் ஸ்வப்னம் ஸாதிக்க, மேலக்கோட்டைக்கு எழுந்தருளினார். ஆங்கே கல்யாணிக் கரையிலுள்ள தமது மடத்தில் சிஷ்யப்ருந்தங்களுக்குக் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

நந்தன வருஷம் பங்குனி மாஸம் (1473 ளு மார்ச்சு மீ) கிருஷ்ணபக்ஷ த்விதீயை திதி மேல்நாடான பரமபதத்துக்கு எழுந்தருளினர். திருநாராயணபுரம் கல்யாணிக் கரையில் பிருந்தாவனம்.

ஆஸ்தான நிர்வாக காலம் 14 வருஷம், 11 மாதங்கள்.

இந்த வம்சத்தைச் சேர்ந்த பலர் மிகப்பெரிய (லௌகிக) அந்தஸ்துகளில் இருந்தும், தற்பொழுது நம் வம்ச பெருமைகளையும், முன்னோர்களான ஸ்ரீமந் நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார், ஸ்ரீதிருமலைநம்பி, ஸ்ரீ திருக்குருகைப்பிரான் பிள்ளான் போன்ற மஹநீயர்களைப்

பற்றியும், அவர்களது அரிய ஸேவைகளைப் பற்றியும் தற்காலத்தில் இருக்கும் நம் வம்சத்தினர் அறிந்துகொள்வது அவச்யாமாகும்.

<u>கணிசப்பாக்கம் வீராகவ மஹாதேசிகன் ப்ருந்தாவனம்:-</u>

நம்பாக்கம் தாதவம்சத்தினர் நம்பாக்கம், பத்ராசலம், சென்னை, திருவல்லிக்கேணி, மாம்பலம், ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சிபுரம், திருவள்ளூர், மேட்டுப்பாளையம், கொங்கம்பட்டு, வீரப்பார், வேங்கடாத்ரி அகரம், புதுச்சேரி, மஞ்சக்குப்பம், திருவஹீந்திரபுரம், சொர்ணாவூர், திருக்கோவலூர், தேவபாண்டலம், ஐயம்பேட்டை, அன்னதானம்பேட்டை, குறிச்சிப்பாடிகுப்பம், வேங்கடம் பேட்டை, தமக்கடிநத்தம், புலவனூர், கடலூர், கண்டரக்கோட்டை, சிதம்பரம், கணிசப்பாக்கம், செம்மேடு, பயித்தாம்பாடி, ஸ்ரீமுஷ்ணம், திருப்பாச்சனூர், விருத்தாசலம், கூத்தக்குடி, கள்ளக்குறிச்சி, நாவலூர் முதலிய ஊர்களிலும் வாசம் செய்ததாக தெரிகிறது.

நம்பாக்கம் தாதாசாரியர் வம்சத்தில் 52வது தலை முறையில் கணிசப்பாக்கத்தில் அவதரித்த "வீராகவாச்சாரியர்" ஸ்வாமி ஆச்ரம ஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு "வீராகவ மஹாதேசிகன்" என்ற சந்யாஸ்ரம நாமத்துடன் அங்கேயே திருநாட்டை அலங்கரித்துவிட்டார். இந்த ஸ்வாமியின் ப்ருந்தாவனம் கணிசப்பாக்கத்தில் உள்ளது. ப்ரதி வருஷம் புரட்டாசி மாஸம் மூலத்தில் இவரது திருநக்ஷத்ரம் கணிசப் பாக்கம் தாதவம்சத்தினரால் கொண்டாடப்பட்டு வருகிறது.

இவருடைய காலம் 250 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பதும், இவர் தலைசிறந்த ஞானியாகத் திகழ்ந்துள்ளார் என்பதும், சித்திகள் பல இவருக்கு கைவரப்பெற்று, பல்வேறு அற்புதங்களைப் புரிந்து ஞானியாக விளங்கினார்.

கணிசபாக்கத்தில் (பண்ணுருட்டி அருகில்)
ஸ்ரீவீரராகவார்ய மஹாதேசிகன் ப்ருந்தாவனம்



ஸ்ரீஶைல வம்ச கலசோததி பூர்ண சந்த்ரம்
ஸ்ரீக்ருஷ்ண தாத தநயம் விநயாபிராமம் ।
தத்திவ்ய த்ருஷ்டி பரிவர்த்தித மந்த்ராஜம்
ஸ்ரீவீரராகவ குரும் சரணம் ப்ரபத்யே ॥



MARAGATHA VALLI THAYAR SRIDEVI BHODEVI GODA SAMETHA
SRI PRASANNA VENLATESA PERUMAL
THIRUMALAI KUMARA - NAMBAKKAM - NEAR NAGARI (A.P)